

வைகுந்தா! மணிவண்ணனே என்பொல்லாத்திருக்குறளா!
என்னுள் மன்னி
வைகும் வைகல் தோறும் அமுதாயவானேறே!
செய்குந்தாவருந்தீமையுன்னடியார்க்குத் தீர்த்து
அசுரர்க்குத் தீமைகள்
செய்குந்தா! உன்னைநான் பிடித்தேன்கொள் சிக்கெனவே!

"பரமபத நாதனே! நீலமணி போன்ற வடிவுடையவனே! நான் அனுபவிக்கும்படியான அழகிய வாமன மூர்த்தியே! என் மனதே நிலைத்து இருந்து, ஒவ்வொரு வினாடியும் எனக்கு அமுதமாக இனித்திடும் நித்யஸூரி நாதனே! செய்யப்பட்டுக் குறைவு படாதனவும், போக்குதற்கு அரியனதாகவும் உள்ள பாவங்களை உன் அடிமைகளிடமிருந்து போக்கி, அசுரர்களுக்கு அந்தத் தீமைகளை உண்டாக்கிடும் பரிசுத்தமானவனே! இப்படிப்பட்ட உன்னை அடியேன் உறுதியாகப் பிடித்துக் கொண்டேன்."

(திருவாய்மொழி - 2-6-1)

நன்றி : கிரந்தமாலா - காஞ்சிபுரம்.

# ஸப்தகிரி

அக்டோபர் - 1996

மலர் 27 இதழ் 5

தனிப்பிரதி ரூ. 4 வருடச்சந்தா ரூ. 48/-

சிறப்பாசிரியர் :
திரு. எம்.கே.ஆர். விநாயக், ஐ.ஏ.எஸ்.
செயலாட்சித்தலைவர்,
தி.தி.தேவஸ்தானம்,
திருப்பதி.

ஆசிரியர்:
திரு. என்.எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

அச்சிடுபவர்:
திரு. எம். லக்ஷ்மண் ராவ்,
மேலாளர்,
தி.தி.தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

பிரதிகளுக்கு:
EDITOR,
"Sapthagiri"
T.T.D., Tirupati.

## உள்ளுறை



## அட்டைப்பட விளக்கம்

முகப்பட்டை : ஸ்ரீ மலையப்ப சுவாமி - உத்ஸவர்
ஸ்ரீவேங்கடேஸ்வரசுவாமி கோயில் - திருமலை.

முதல் உள்ளட்டை : ஸ்ரீ பொய்கையாழ்வார்

2-வது உள்ளட்டை: ஸ்ரீ பூதத்தாழ்வார்.

பின்னட்டை : 'தெள்ளியார் வணங்கும்' திருமலைக்கோயில்.

JAGADISH





# NAVAJEEVAN BLIND RELIEF CENTRE (REGD)

**(FREE HOME FOR THE BLIND AND AGED)**

2-21-A, SAPTHAGIRI ASHRAM, TIRUCHANOOR, TIRUPATI-517 503

"எந்தரோ மஹானுபாவுலு - அந்தரிகி வந்தனமுலு"

**வணக்கம்**

"எந்தரோ மஹானு பாவுலு" என்று பெரியோர்கள் கூறியபடி எத்தனையோ ஊர் - பெயர்-முகம் தெரியாத கருணை உள்ளம் கொண்ட ஆஸ்தீக அன்பர்கள், கடந்த 15 வருடங்களாக அளித்து வரும் ஆதரவின் காரணமாக திருப்பதி நவஜீவன் ஆச்ரமத்தில் சுமார் 75 பார்வையற்ற குழந்தைகளும் ஆதரவற்ற முதியோர்களும் இலவசமாக உணவு, உடை, இருப்பிடம் மற்றும் கல்வி, அறிவு பெற்று பயன் அடைந்து வருகிறார்கள்.

மேலும் விரைவில் 50 படுக்கைகள் கொண்ட ஒரு இலவச கண் மருத்துவமனையும் ஆஸ்தீக அன்பர்களின் உதவியுடன் நிர்மாணிக்க உத்தேசித்துள்ளோம்.

## வேண்டுகிறோம் அன்பர்களின் உதவியை

திருப்பதி நவஜீவன் ஆசிரமத்தில் வசித்துவரும் ஆதரவற்ற முதியோர்கள் மற்றும் பார்வையற்ற குழைந்தைகளுக்கு தினந்தோறு மூன்று வேளையும் தொடர்ந்து அன்னதானம் நடைபெறுகிறது. திருப்பதி புண்யஸ்தலத்தின் நவஜீவன் ஆச்ரமத்தில் அன்னதானம் வழங்க நாள் ஒன்றுக்கு சுமார் ரூ. 500/- செலவாகிறது.

ஆஸ்தீக அன்பர்கள் வருடத்தில் ஏதேனும் ஒரு நாளில் (உங்களுடைய பிறந்தநாள், திருமண நாள் குழந்தைகளின் பிறந்தநாள், அல்லது முன்னோர்களின் திதிநாளில்) நவஜீவன் ஆச்ரமத்தின் பார்வையற்ற குழந்தைகளுக்கும், திக்கற்ற முதியோர்களுக்கும் ரூ. 500/- காணிக்கையாக அனுப்பி ஒருநாள் அன்னதானம் வழங்க ஏற்பாடு செய்து ஸ்ரீவேங்கடேச பெருமாளின் அருளைப் பெற வேண்டுகிறோம்.

அன்னதானம் வழங்கும் அன்பர்களின் சார்பாக குறிப்பிட்ட நாளில் ஸ்ரீ ஏழுமலையான் மற்றும் ஸ்ரீபத்மாவதி தாயாருக்கு கூட்டுப் பிரார்த்தனை செய்வித்து பிரசாதத்துடன் விபரம் அனுப்பிவைக்கப்படும்.

நவஜீவனுக்கு அனுப்பி வைக்கப்படும் டொனேஷனுக்கு வருமான வரிச்சலுகை உண்டு. Contributions to Navajeevan Blind Relief Centre, Tirupati are exempted from Income Tax U/S 80 (G) vide Hqrs. No. 1 (118) VJA/95-96. Valid upto 31-3-98.

ஆஸ்தீக அன்பர்கள் தங்களது டொனேஷனை by Ch/DD/MO வாயிலாக NAVAJEEVAN BLIND RELIEF CENTRE, என்கிற பெயரில் மேற்குறிப்பிட்ட அட்ரஸுக்கு அனுப்ப வேண்டுகிறோம்.

"ஆதரவற்றவர்களுக்கு அளிக்கும் உதவிகளும் ஆண்டவனுக்கு செய்யும் தொண்டாகும்."
ஸ்வாமி விவேகானந்தா.

நாராயண ஸேவையில்

K.S. ஆசார்யா
Founder / President.

நவஜீவன் ஆச்ரமம்,
திருச்சானூர், திருப்பதி-517503.

# உங்களுடன்....

இம்மண்ணில் அதிகாரமற்ற பொறுப்புள்ள பதவிகளும், பொறுப்பற்ற அதிகாரப் பதவிகளும் மலிந்து கிடக்கின்றன. ஆனால் பொறுப்பும் அதிகாரமும் கொண்ட பதவிகளை எண்ணிக்கையில் அடக்கிவிடலாம். அத்தகு பதவிகளுள் திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் செயலாட்சித் தலைவர் பதவியும் ஒன்று என்று கூறினால் அது சிறிதும் மிகைப்படுத்தப்பட்ட கருத்தாகாது. திருமலையில் யாத்திரிகர்கள் கூட்டம் அல்லது உண்டியல் காணிக்கை அல்லது லட்டின் அளவு குறைந்தாலும், அதிகமானாலும் அவை ஒரு பெட்டிச்செய்தியாக பத்திரிகைகளில் வெளிவந்திடும் அளவு 'திருமலை'யின் முக்கியத்துவம் நாளும் பெற்று விடுகிறது. இதனால் மதிப்பும் பாதிப்பும் பெறுவது செயலாட்சித் தலைவர் பதவியேயாகும். மாநில, மத்திய அரசு மாண்புமிகு அமைச்சர்கள், உயர் அரசு அலுவலர்கள், அரசியல் தலைவர்கள் என்று நாளும் வருகை புரியும் நிலையில் திருமலை திகழ்வதாலும், "செயலாட்சித் தலைவர்" பதவி சிறப்பிடம் பெறுவது மட்டுமின்றி, பொறுப்புள்ளதாகவும் விளங்குகிறது.

மேலும், பொதுமக்கள், யாத்திரிகர்கள் மட்டுமின்றி தன்னுடைய சுமார் பதினாறு யிரம் ஊழியர்களின் நலன் மற்றும் தேவைகளை நேரிடையாக நாளும் கவனிக்கவேண்டிய கடமையும், பொறுப்பும் உள்ள பதவியாளராக செயலாட்சித் தலைவர் செயல்படுகின்றார். ஆகவே தங்களுடைய பதவிக்காலத்தில், ஒவ்வொரு செயலாட்சித்தலைவரும் தனக்கென ஒரு தனிமுத்திரையினைக் கட்டாயமாகப் பதித்துச்செல்லவேண்டிய நிலையில் உள்ளபோது, தற்போது, சுமார் இரண்டாண்டு காலம் தி.தி. தேவஸ்தானத்தின் செயலாட்சித் தலைவர் பதவியை வகித்து, அரசின் மற்றொரு துறைக்குச்செல்லும் திரு. நிம்மகட்டா ரமேஷ்குமார் ஐ.ஏ.எஸ். அவர்கள் தானும் தன்னைப் பொறுத்தவரை தி.தி. தேவஸ்தான வரலாற்றில் ஒரு புதிய அத்தியாயத்தினை எழுதிவிட்டே சென்றுள்ளார் என்பதில் சிறிதும் ஐயமில்லை. ' மக்கள் சேவையே மகேசன் சேவை' என்ற உயர் மொழிக்கு ஓர் உதாரணமாக பதவி வகித்த திரு. ரமேஷ் குமார் அவர்கள் ஆயிரக்கணக்கில் திருமலைக்கு வருகை தரும் யாத்திரிகர்களின் வசதிகளையே மனதிற்கொண்டு, திருமலைக்கோயிலின் முக்கிய பிரஸாதமான 'லட்டு'களின் கள்ளச்சந்தை விற்பனையைத் தடுத்திடவும், யாத்திரிகர்கள் ஒவ்வொருவரும் அப்பிரஸாதத்தினைப் பெற்றிடவும், 'டோக்கன்' முறையில் லட்டுவிற்பனையை அமுல்படுத்திய பெருமை அவரையே சாரும். திருமலைக்கோயிலின் முக்கிய விழாக்களான பிரம்மோத்ஸவம், வைகுண்ட ஏகாதசி மற்றும் புத்தாண்டு துவக்கநாள் போன்றவற்றின் போது கூடிடும் பக்தர்களின் நடுவில் ஓர் ஆன்மீகச் சூழ்நிலையைப் பெருமளவில் உருவாக்கிடும் வகையில் தென்னகத்தைச் சார்ந்த பல கலைஞர்களின் இசை, நாட்டியம், நாட்டுப்புற நிகழ்ச்சிகள் போன்றவற்றை நடப்பித்து, அவ்விழாக்களை, அவற்றில் பங்குபெறும் திருமலை யாத்திரிகப்பொதுமக்களின் பக்திக் களிப்பினை நாட்டு மக்களும் கண்டு பரவசம் அடைந்திடும் வகையில் தேசிய தொலைக்காட்சி அமைப்பின் மூலம் ஒளிப்பரப்பித் தன் நிருவாகத்திறமையை, திருமலைக்கோயில் ஈடுபாட்டினைச் சுட்டிக்காட்டினார்.

மேலும் திருமலையில் ஆர்ஜித சேவைகள், இடவசதிகள் ஆகியவற்றை கணிப்பொறி மூலம் முன்பதிவு மற்றும் ஒதுக்கீடு முறைகளை மேற்கொண்டு தன்னை இனம் காட்டிக்கொண்டார். திருச்சானூர் ஸ்ரீபத்மாவதி தாயார் கோயிலின் பிரம்மோத ஸவத்தினை முதன் முறையாக திருமலைக்கோயில் பிரம்மோத்ஸவத்திற்கு நிகராக அகிலம் போற்றிடும்வகையில் நடப்பித்த பெருமையும், மக்கள் நலனுக்காக திருச்சானூ ரில் 'ஸ்ரீயாகம்' எனும் புனித வேள்வியினை ஏற்பாடு செய்த சிறப்பும் அவரையே சாரும். எல்லாவற்றிற்கும் மகுடம் வைத்தாற்போன்று, வேங்கடவன் மீது தீராப்பக்தி கொண்ட பல தொழிலதிபர்கள், பொதுமக்கள் மூலமாக உத்ஸவர்க்கு விலையுயர்ந்த ஆபரணங்களும், கோயிலுக்கு நகரா சொத்துக்களும் சேர்த்து வைத்த அவர்தம் திறமை விளங்குகிறது. 'ஸப்தகிரி' பத்திரிகையினை காலக்கிரமத்தில் வெளிக்கொணரவும், சமய நூல்களை அச்சிடவும் அவர் மேற்கொண்ட ஆக்கப்பூர்வமான முயற்சிகள் நாங்கள் நன்கு அறிந்த ஒன்றாகும். இளமையும், உழைப்பும், கடமை உணர்வும் கொண்டு, தேவஸ்தானத்தின் வளர்ச்சியில் பெரிதும் பங்கேற்ற, திரு. என். ரமேஷ்குமார் அவர்கள் எங்கும் என்றும் வளமுடன் திகழ்ந்திட, அவ்வேங்கடவன் அன்னார்க்கு திருவருள் புரிந்திட வேண்டுகிறோம்.

அத்தகு பெருமைமிகு, பொறுப்புமிகு செயலாட்சித் தலைவர் பதவியினை தற் போது பொறுப்பேற்றுக்கொண்ட திரு. எம்.கே.ஆர். விநாயக், ஐ.ஏ.எஸ். அவர்களுக்கு தி.தி. தேவஸ்தான நிருவாக அமைப்பு புதியது அல்ல. முதிர்ந்த நிருவாக அனுபவ சாலியான திரு. விநாயக் அவர்கள் ஆந்திரமாநில அரசின் இந்து சமயம் மற்றும் அறநிலையத்துறையின் ஆணையராக பணிபுரிந்தபோது, தி.தி. தேவஸ்தானத்துடன் அவர் பெற்றுள்ள நிருவாக இணக்கம் தற்போது அவருடைய பதவிப் பணியினை எளிதாக்கும் என்றே நம்புகிறோம்.

சுமார் முப்பதாண்டு நிருவாக அனுபவம் பெற்றுள்ள திரு. விநாயக் அவர்கள் பிரச்சனைகளை புன்சிரிப்புடன் அணுகும்முறை அவர்தம் தனிச்சிறப்பாகும். 'ஆகட்டும் பார்க்கலாம்' எனும் அவர்தம் அணுகுமுறை அவர்தம் ஆற்றலையும், அனுபவத்தையும் அளந்து காட்டும். உலகம் போற்றும் திருமலை திருப்பதி தேவஸ்தானம் எனும் ஒரு இந்து சமய நிறுவனத்திற்கு அதன் ஊழியர்களால், அவர்கள்தம் செயல்பாடுகளி னால் எந்தவிதக் களங்கமும் ஏற்படாதிருக்க அவர் மேற்கொண்டுவரும் நிருவாக வழிமுறைகள் அவர்தம் தனிச்சிறப்பிற்கு உதாரணங்களாகும். முன்னவர்போலவே 'ஸப்தகிரி' மீது மற்றும் ஆகமம், சாத்திரம் வேதம் சம்பந்தப்பட்ட சமய நூல்களை வெளிக்கொணர்வதிலும் காட்டிவரும் ஈடுபாடு போற்றுதற்குரியதாக அமைந்துள்ளது.

ஆகவே செயலாட்சித் தலைவர் திரு. விநாயக் அவர்கள் தம் பதவிக்காலத் தில் திருமலைக்கோயில் நிருவாகம் மேலும் சிறந்தோங்கிடவும், யாத்திரிகர்களின் எதிர்பார்ப்பு நன்முறையில் நடந்திடவும், 'ஸப்தகிரி' பத்திரிகை மேலும் தனித்தன் மையுடன் விளங்கிடவும், அன்னார்க்கு ஏழுமலையான் துணையிருந்து தண்ணருள் புரிந்திட அப்பரமனையே தொழுகின்றோம்.

# செய்திச் சுருக்கம்

## பிரிவு வாழ்த்துரை விழா

சுமார் இரண்டாண்டு காலம் தி.தி. தேவஸ்தானத்தின் செயலாட்சித் தலைவராக பணிபுரிந்து தற்போது பதவி மாற்றம் பெற்றுச்செல்லும் திரு. என். ரமேஷ்குமார் அவர்களுக்கு தி.தி. தேவஸ்தானத்தின் பல்வேறு ஊழியர்கள் சங்கங்களின் சார்பில் பிரிவு வாழ்த்துரை அண்மையில் வழங்கப்பட்டது. இது சம்பந்தமாக ஏற்பாடு செய்யப்பட்ட விழாவின்போது, திரு. ரமேஷ்குமார் அவர்களின் கடமை உணர்வும், சமய ஈடுபாடும் பெரிதும் பாராட்டப்பட்டன. அதே நாளன்று புதிய செயலாட்சித் தலைவராக பதவி ஏற்ற திரு. எம்.கே.ஆர். விநாயக் அவர்களுக்கு தேவஸ்தான ஊழியர்கள் சார்பில் வரவேற்பு அளிக்கப்பட்டது. இந்நிகழ்ச்சிக்கு வருகை புரிந்தோரை தி.தி. தேவஸ்தான ஊழியர் நல அலுவலர் திரு. ராமகிருஷ்ணய்யா அவர்கள் வரவேற்க, தி.தி. தேவஸ்தான மக்கள் தொடர்பு அலுவலர் திரு. சுபாஷ் கௌடா அவர்கள் நன்றி நவின்றார்.

* * *

## பிரம்மோத்ஸவம்

திருமலை ஸ்ரீவேங்கடேஸ்வர சுவாமி கோயிலின் வருடாந்திர பிரம்மோத்ஸவம் 14-9-96 முதல் 23-9-96 வரை வெகு விமர்சையாகக் கொண்டாடப்பட்டது. 19-9-96 அன்று நடைபெற்ற முக்கிய பிரம்மோத்ஸவ நிகழ்ச்சியான கருட சேவையன்று ஆயிரக்கணக்கில் பக்தர்கள் திருமலையில் கூடி, உத்ஸவ மூர்த்திகளின் திருவீதி உலாவினை கண்டு களித்து இறையருள் பெற்றனர். அன்று இரவு, ஆந்திர மாநில அரசு சார்பில், மாநில முதல்வர் திரு. என். சந்திரபாபு நாயுடு அவர்கள் ஏழுமலையானுக்குப் பொன்னாடை அளித்தார். அதேநாளன்று வழக்கம்போல், ஸ்ரீவில்லிப்புத்தூரிலிருந்து ஏழுமலையானுக்கு பூ மாலைகளும், கோயில் குடைகளும் திருமலை வரை கால்நடையாகவே பக்தர்களால் கொண்டுவரப்பட்டு, கோயிலுக்கு அளிக்கப்பட்டன. அன்றைய கருட சேவையன்று மேற்படி பூமாலைகளும், குடைகளும் பயன்படுத்தப்பட்டன.

22-9-96 அன்று நடைபெற்ற திருத்தேர் விழாவில் ஆயிரக்கணக்கான பக்தர்கள் கலந்து கொண்டனர். 20-9-96 அன்று இந்திய குடியரசுத் தலைவர் திரு. என். சங்கர் தயாள் சர்மா அவர்கள் திருமலைக்கு வருகை புரிந்து பிரம்மோத்ஸவ நிகழ்ச்சிகளில் பங்கேற்றது குறிப்பிடத்தகுந்த செய்தியாகும். இப் பிரம்மோத்ஸவத்தின்போது திருமலையில் பத்து நாட்களுக்கு பல்வகையான பழங்கள், வண்ண மலர்கள் இடம்பெற்ற கண்காட்சி அரங்கு ஒன்று செயல்பட்டது. இந்நாட்களின்போது தர்மபிரசார பரிஷத், தாஸ ஸாகித்ய திட்டத்துறை, அன்னமாசார்யா திட்டத்துறை ஆகியவற்றின் சார்பில் இசை, நாட்டியம், ஹரிகதை போன்ற சமய நிகழ்ச்சிகள் காலை முதல் இரவு வரை நடைபெற்றன.

* * *

## நூல் வெளியீட்டுவிழா

சென்னை, தி.நகர், திருமலை திருப்பதி தேவஸ்தான அரங்கில் 2-10-96 அன்று மாலை 4-00 மணியளவில் நிகழ்ந்த புலவர் ஏ. பரந்தாம ராமாநுஜ தாசர் எழுதிய "இவர்கள் சந்தித்தால்" (ஆழ்வார்களும் - எம்பெருமானும்) நூல் வெளியீட்டு விழாவிற்கு அண்ணா பல்கலைக்கழக

## பத்மாவதி பரிணயம்

**(கல்யாணோத்ஸவம்)**

**இக்கோயில் நிகழ்ச்சி திருச்சானூர் ஸ்ரீபத்மாவதி தாயார் திருக்கோயில் வளாகத்தில் நாள்தோறும் காலை 10-30 மணி முதல் மதியம் 12 மணி வரை நடைபெறும். கிருஹஸ்தர்கள் ரூ. 500/-ஐ நேரிடையாக கோயில் அலுவலகத்திலோ அல்லது வங்கி காசோலை மூலமாகவோ (முன்கூட்டியே அனுப்புதல் வேண்டும்) செலுத்தலாம். இதற்கான சீட்டுகள் இடவசதி காரணமாக குறைந்த அளவே விற்கப்படும். கிருஹஸ்தர்களுக்கு சிறப்பு தரிசன வசதியும், வஸ்த்ர பஹுமானமும் அளிக்கப்படும்.**

துணை வேந்தர், பத்மஸ்ரீ பேராசிரியர் இரா. மா. வாசகம் அவர்கள் தலைமை தாங்கி தமது தலைமை உரையில் நமது சமய வரலாறுகள் தமிழ் தேவநாகிரி, ஆங்கிலம் ஆகிய மொழிகளில் கணிப்பொறியின் துணை கொண்டு ஒலி நாடாக்களில் பதிவு செய்து வரலாற்றுப் பெட்டகமாக்கி, உலக அளவில் கிடைக்க வழிவகை செய்யவேண்டும் என்று பேசி, நூலாசிரியரைப் பாராட்டினார்.

ஆழ்வார்கள் ஆய்வு மையம் நிறுவி, நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்திற்கு நயவுரை வழங்கி, நாடெங்கும் வழங்கிய டாக்டர் ஜெகத்ரட்சகன், நூலை வெளியிட்டு, தமது உரையில் வைணவ நெறிகளும், திவ்வியப் பிரபந்தக் கருத்துக்களும், பாமர மக்களும் புரிந்து கொள்ளக் கூடிய எளிய தமிழ நடையில் நூல்கள் பல எழுதி வெளியிடப் பட வேண்டுமென்பதை வற்புறுத்தி, அப்பணியைத் தொடங்கிய நூலாசிரியரைப் பாராட்டினார்.

முன்னிலை வகித்த குமாரவாடி இராமாநுஜாச்சாரியார் வைணவம் வளர்த்த தமிழைப் பற்றியும், வைணவ நெறிகளைப் பற்றியும் விளக்கி, ஆசிரியருக்கு வாழ்த்துரை வழங்கினார்.

தஞ்சைப் பல்கலைக் கழக முன்னாள் துணைவேந்தர் டாக்டர் ஔவை நடராசன் ஆசிரியரின் கட்டுரைகள், மேலைநாட்டு நாடகப் பாணியில் அமைந்ததைப் பாராட்டி, இதுபோன்ற பல நூல்களை எழுதி வெளியிட வாழ்த்தினார்.

டாக்டர் சுதா சேஷையன், டாக்டர் அமிர்தலிங்கம், திரு. ரகுவீரன் திரு. கோபி நாதன் ஆகியோர் நூலின் சிறப்பு அம்சங்களை எடுத்துக்காட்டி, நூல் எளிய தமிழ் நடையில் அமைந்ததைக் குறிப்பிட்டு, நூலாசிரியரைப் பாராட்டினர்.

ஸ்ரீ வைணவ மகா சங்கச் செயலாளர் திரு. வேணுராச நாராயணன் வரவேற்புரையும், நன்றியுரையும், நூலாசிரியர் ஏற்புரையும் வழங்கினார்.



### பதவி உயர்வு

திரு. பி. முனிரெட்டி அவர்கள் தி.தி. தேவஸ்தானத்தின் தலைமைப் பொறியாளராக நியமிக்கப்பட்டுள்ளார்.



# மாறன் கண்ட மாமலையான்

திரு. ஆர். நரஸிம்ஹாசாரியார் - ஸ்ரீரங்கம்.

மாறனெனும் நம்மாழ்வார இறைவனால் மயர்வற மதிநலமருளப்பெற்றவர. எம்பெருமானுடைய ஸ்வரூப-ரூப-குண விபூதிகளை உள்ளங்கை நெல்லிக்கனியாகக் கண்டவர். ப்ரபந்ந ஜனகூடஸ்தர. எம்பெருமான் தன் தனிப்பெருங்கருணையினால் பதினாறு வயது நிறைந்தவாறே நம்மாழ்வாருக்கு திவ்ய தேசங்களில் ஆழங்கால் படும்படி விசேஷ கடாக்ஷம் பண்ணியருளினான்.

ஆழ்வார்தம் திருவாய்மொழி ப்ரபந்தத்தில் முப்பது திவ்ய தேசங்களைப்பாடி அநுபவித்துப் பேசினாலும் திருவேங்கடவனிடம் அதிக ஈடுபாடுடையவர் எனத் தெளிவாகிறது. வேங்கடவனைப் பல இடங்களில் பேசி மகிழ்கிருர்.

(5) நம்மாழ்வார் ஓடும்புள்ளேறி என்ற திருவாய்மொழியில் 'நீர்புரைவண்ணன் சீர்' என்று நீரோடு ஒத்த சுபாவத்தை உடையவன் இறைவன் என்கிருர். நீருக்கு ஆர்ஜவம் என்பது காட்டின வழியே போதலாகும். இறைவனுக்கு ஆர்ஜவகுணமாவது- ஆச்ரிதர்க்குத் தன்னை அமைத்துக்கொடுக்கு போது அவர்கள் குறைபாராதே செவ்வியனாக இருக்கை. மாமுனிகள், மேட்டிலே நீரை விரகாலே ஏற்றுமாப்போலே இவர்கள் செவ்வைக்கேடே செவ்வையாம்படி தன்னைச் செவ்வியமனாக அமைத்துக்கொடுக்கும் ஸ்வபாவமுடையவன் ஆர்ஜவ குணத்தைப் பேசுகிருர்.

முதல் பாசுரத்தில் 'ஓடும்புள்ளேறும் அம்மான்' என்றும் 2-ம் பாசுரத்தில் 'வெம்மாவாய் கீண்ட கண்ணன்' என்றும் 4,5,6-ம் பாசுரத்திலும் வெற்பெடுத்தவன், வைகலும்வெண்ணெயுண்டவன் என்றும், நிலம் கொண்ட வாமனன் என்றும் கண்ணனையும் வாமனனையும், ஏழாம் பாசுரத்தில் ஏழ் விடை கொண்ட கண்ணனையும் பேசி அநுபவிக்கிருர். வேறு திவ்ய தேசத்தைப் பற்றிப்பேசவில்லை. மூன்றும் பாசுரத்தில் வேங்கடவனைப் பேசுகிருர்.

கண்ணுவான் என்றும் மண்ணோர் விண்ணோர்க்கு
தண்ணார் வேங்கட விண்ணோர் வெற்பனே.

அலர்மேல்மங்கை மணவாளனாகிய எம்பெருமான் ஸம்ஸா



ரிகளுக்கும் நித்ய சூரிகளுக்கும் நிர்வாஹகன். அவனுக்கு ரக்ஷிக்கப் படுவாரைப் பெறாமையால் வந்த தாபத்தையும் இவர்களுக்குக் காவலனைப் பெறாமையால் வந்த தாபத்தையும் ஆற்றி குளிரச்செய்யத் தன் திருவேங்கடமலையில் நித்யமாக வாழ்பவன் என்று. 'சக்ஷுர் தேவானாமுத மர்த்யானாம்' என்கிற வேதப்பொருள் அவனே என்று காட்டினான் 'வேதப்பொருளே! என் வேங்கடவா!' என்பர் பெரியாழ்வாரும்.

(ங) மயர்வற மதிநலமருளப் பெற்ற நம்மாழ்வார் தாம்பெற்ற ஞானத்தின் பயனாகிய வீடு பேற்றைப் பெறவிரும்பி 'வாடி வாடும் இவ்வாணுதலே' என்கிறபடியே மிகவும் வாடினார். 'ஆராவமுதமாய் அல்லாவி உள் கலந்த காரார் கருமுகில் போல என் அம்மான் கண்ணன் என கிறபடியே' ஆழ்வார் வாடி உலராமல் அவருடைய உயிர் சேர்ந்து சிக்கெனப்புகுந்தான். புகுந்த எம்பெருமான் திருஉள்ளத்தில் ஆழ்வார் தம் தகுதியின்மையை நினைத்து பின்வாங்கினால் என் செய்வது? ஆழ்வாரைப் பிரியநேரிடுமே என்று ஐயம் உண்டாயிற்று. ஆழ்வார் 'இறைவா! எம்பெருமானே! அடியேன் உள்ளம் புகுந்தாய்! ஐயுறவேண்டா. உன்னை நான் விடாதபடி உறுதியாகப் பிடித்தேன். விடுவேனோ' என்று ஐயத்தைக் களைகிறார். பார்த்தனுக்குத் தன் திருவடிகளையே சரம உபாயமாகக் காட்டிக்கொடுத்த ஈச்வரனை மாசுச: ஏன் கவலை கொள்கிறாய் என்கிறார் 'வைகுந்தா மணிவண்ணனே என்கிற பதிகத்தில். இப்பதிகத்தில் வேறு திவ்யதேசத்தெம்பெருமானைப் பற்றிப் பேச்சில்லை. உள்ளம்



## தி.தி. தேவஸ்தானத்தாரின்

# ஸ்ரீபத்மாவதி தாயார் திருக்கோயில்,

## திருச்சானூர்.

### வெள்ளிக்கிழமை நிகழ்ச்சி நிரல்கள்:

**காலை**

| | |
|---|---|
| 5-00 முதல் 5-30 வரை | .... சுப்ரபாதம் |
| 5-30 முதல் 6-30 வரை | .... ஸஹஸ்ரநாம அர்ச்சனை நித்ய அர்ச்சனை, முதல்மணி |
| 6-30 முதல் 7-00 வரை | .... சடலிம்பு |
| 7-00 முதல் 8-00 வரை | .... அபிஷேகம் |
| 8-00 முதல் 9-00 வரை | .... மூலவர்க்கு அலங்காரம் இரண்டாவது மணி |
| 9-00 முதல் இரவு 8-00 வரை | .... ஸர்வ தரிசனம் |

**மாலை**

| | |
|---|---|
| 6-00 முதல் 8-00 வரை | .... திருவீதிஉலா மற்றும் ஊஞ்சல் சேவை |

**இரவு**

| | |
|---|---|
| 8-00 முதல் 8-30 வரை | .... இரவு கைங்கர்யம், இரவு மணி |
| 8-30 முதல் 9-00 வரை | .... ஸர்வ தரிசனம் |
| 9-00 மணிக்கு | .... சுத்தி, ஏகாந்த சேவை |

### அபிஷேகம்

**மாலை**

| | |
|---|---|
| 7-00 முதல் 8-00 வரை | .... அபிஷேகம். நபர் ஒருவர் ரூ. 100/- செலுத்தி பங்கேற்கலாம் ரூ. 5/- நபர் ஒருவர் செலுத்தி 'அபிஷேக தரிசனம்' காணலாம். |

* திருப்பதியிலிருந்து 5 கி.மீ. தொலைவிலுள்ள திருச்சானூருக்குப் போய்வர பேருந்து வசதிகள் உண்டு.

புகுந்து அந்தர்யாமியாயிருப்ப வனும் வேஙகடவனே என்கிருர். மண்ணேர் விண்ணேர வைப் பில் ஏழுலகுககு உயிர என்பர் ஆசார்யஹ்ருதய நூலாசிரியர.

எந்தாய்! தண் திருவேங்கடத்துள்
நின்ருய் இலங்கை
செற்ருய் மராமரம்
பைந்தாளேழுருவஒருவாளிகோத்த
வில்லா!
கொந்தார் தண்ணந்துழாயினாய்
அமுதே உன்னை
என்னுள் குழைத்தவெம்
மைந்தா! வானேறே இனிஎங்குப்
போகின்றதே.

கருத்து: சிரமத்தைப் போக்கு மதான குளிர்மாமலையாம் திரு மலையிலே வந்து நின்று உன் ஸ்வாமித்வத்தைக் காட்டி என்னை உன் அடிமைத் திறத் தில் நிறுத்தினவனே!

இலஙகைசெற்ருய் - உன்னை அடையத் தடையாக இருந்த விரோதியான இலங்கையை அழித்தாய். மராமரம் ஏழைத் துளைத்து குரக்கரசனா கிய சுக்ரீவனுடைய சந்தேகத் தைப் போக்கினாய். உனக்கும் ஐயமா! உன் சந்தேகத்தைத் தவிர்த்து என்னோடு கலக்க வேணும் என்கிருர்.

என்னுள்குழைத்த - தேனை யும் மருநதையும் குழைத்தால் பிரிககமுடியாதபடி ஒன்ருகக் கலப்பது போல கலந்தாய். நான் குழைத்தேனில்லை. நீயே குழைத்தாய். இது உன் தனிப் பெருங்கருணையாம். அர்ச்சா வதாரத்தில் ஸம்ஸார வெள் ளம் இடுப்புக்குக் கீழேபோய் விடும் என்று காட்டும் கையி லும், கவலைப்படாதே, அஞ்ச வேண்டா என்ற அபயமளிக்கும் ஹஸ்தமுத்ரையும் என் திருவ டியைப் பற்றினார்க்கு ஸம் ஸாரபயமில்லை என்று அருள் வது போன்றநிலை திருவேங்க டவனுககே உள்ளது.

(ச) எம்பெருமானுடைய நிர் ஹேதுக கருபையினால் (தனிப் பெரும கருணையினால்) தம் மோடு நில்லாது தம்மோடு சம் பந்தமுடையார் ஏழேழு தலைமு றையும் பேறுபெற்றது என்று சிறந்துரைக்கின்ற நம்மாழ்வார் கேசவன் முதலான பன்னிரு நாமங்களாலே இறைவன் கிரு பையைப் பேசுகிருர். இப்பதி கம் எந்த திவ்ய தேசத்தையும் பாடவந்த பதிகமல்ல. வேறு திவ்ய தேசத்தெம்பெருமானைப் பற்றிய பேச்சுமில்லை.
'கேசவன் தமர்' பதிகத்தில் 11ம் பாசுரத்தில் திருவேங்கட முடையானைப் பேசுகிருர்.

பற்பநாபன் உயர்வற உயரும்
பெருந்திறலோன்
எற்பரன் என்னையாக்கிக்கொண்டு
எனக்கேதனைத்தந்த
கற்பகம் என்னமுதம் கார்முகில்
போலும் வேங்கடநல்
வெற்பன் விசம்போர்பிரான்
எந்தை தாமோதரனே!

பற்பநாபன் - உந்தித்தாமரை யில் நான்முகனைப் படைத்து அவனைக் கொண்டு உலகத் தைப் படைதத முழுமுதல்கார ணமானவன்.

உயர்வற.....திறலோன - அளவி றந்த சௌர்ய வீர்யங்கள முத லான குணங்களை உடைய வன்.

எற்பரன் - என்னையே தன் நெஞ்சில் நினைத்திருப்பவன்.

எனக்கே தனைத்தந்தகற்பகம் - கற்பகதரு. வள்ளன்மை யில் ப்ரசித்தமானது. அதற்கும் வேங்கடவனாகிய கற்பகத்துக் கும் வேறுபாடு உண்டு. கற்பகத் துக்கு யாசகர்களை உண்டாக் கிக்கொடுக்குமதில்லை. இக்கற்ப கம் அர்த்திகளை உண்டாக்கிக் கொடுக்கும். அது அனை வர்க்கும் தரும். இது எனக்கே தரும்.

என்னமுதம் - அதுதான் போக்யமாயிராது. இது தானே எனக்கு மிகவும் போக்யமாயிருக் கும்.

கார்முகில் போலும் வேங்கட நல்வெற்பன் - மேகம் போன்ற வண்மையுடைய வேங்கடவன். ஸஹ்யமலையில் தோன்றும் காவிரி ஆற்றின் வெள்ளத்துக்கு அழிவில்லாதது போல திரு மலையின் சம்பந்தத்தால் அங் குள்ள எம்பெருமானும் வள்ளலா யிருப்பவன்.

தாமோதரன் - அடியார் இட்ட வழக்காயிருப்பவன்.

வேங்கடநல்வெற்பன் - மிக எளியன்.

கேள்வி: மற்றதிவ்யதேசங்க ளைவிட்டு திருவேங்கடவனைப் பேசுவதற்குக் காரணம் என்ன?

பதில்: எனக்கே தனைத்தந் தான். என்னோடு நில்லாது என்னோடு ஸம்பந்தமுடையா ரும் தன்னுடைய தனிப்பெருங கருணைக்கு இலக்காக்கினான். இதற்கு என்ன காரணம். வள் ளன்மையே காரணம். மலை யைப் பறறிக் கிடக்கிற கார்மு கில் போன்றவன் திருவேங் கடவன். ஆதலால் ஆழ்வார் அவனையே பேசுகிருர்.

(ரு) மாலுக்கு முன்னடிமை செய்து உவப்பால் அனபால் அடிமைசெய்பவரைப் புகழ்ந தும், அடிமையில் அன்பிலா மூடரை நிந்தித்தும் பேசுகிற நம்மாழ்வார் மொய்ம்மாம்பூம் பொழில் என்ற பதிகத்தில் எம்

பெருமான் திருவேங்கடமுடையானைப் பாடாதாரைப் பழித்தும் பாடுவாரைக் கொண்டாடியும் பேசுகிறார். இப்பதிகம் திவ்யதேச மங்களாசாஸனப்பதிகமுமல்ல. ஆதலால் திருவேங்கடவனே இப்பதிகத்துக்குரியவன்.

வார்புனலந்தண்ணருவி திருவேங்-
கடந் தெந்தை
பேர்சொல்லிப் பிதற்றிப் பித்த-
ரென்றே பிறர்கூற
ஊர்ப்பலபுக்கும் புகாதும் உலோகர்
சிரிக்க நின்றாடி
ஆர்வம் பெருகிக்குனிப்பார்
அமரர் தொழுப்படுவாரே.

ஸம்ஸாரிகள் விரோதி போக்கும் நீர்மையுடையவன். காடும் வேடும் வானரமும் தொழநின்றவன். வேதியர் முழுவேதத்தமுதம். எண்ணம் புகுந்து தித்திக்கும் அமுதம். நீர்மையுமினிமையுமுடையவனாகையாலே திருவேங்கடமுடையானைப் பேசினார்.

(L) எம்பெருமான தன் அர்ச்சாவதார எளிமையைக் காட்டக் கண்டு அநுபவித்தார் நம்மாழ்வார். எம்பெருமான் திருவடிகளில் தயலுண்டு நிற்கும் அடியார்க்கு அடியனாய், அடியார் ஈடுபடும் குணங்களில் ஆழங்கால்பட்டு தாமும் தம்முடைய கரணங்களுமாக எம்பெருமானைக்காண ஆசைப்பட்டார். இவ்வநுபவத்துக்கு ஸம்ஸாரிகளை துணையாக்கிக் கொள்ளப்பார்த்தார். அவர்களோ பொருந்தாததைப் பேசுவாரும் புத்தர் என்ற ஜீவனை ஈச்வரன் என்றிருப்பாரும் வேறு தேவதைகளில் ஈடுபாடு உடையவரும், அற்பஸாரமான இவ்வுலக இன்பம் துய்க்க பிறரைக் கவிபாடித் திரிவாருமாயிருந்தனர். அவர்களைப் பார்த்துப் போம் வழியைத் தரும் வானவரீசனாம் வேங்கடவன் நிற்க மானுடம்பாடுவதால் என்ன பயன்? வினைவர தாதையாம் வேங்கடவனைப் பாடினால் தன்னாகவே கொண்டு பிறவாமல் செய்வான். மன்னாமனிசரைப் பாடாமல் பரமனைத் துதிக்க வாருங்கோள் என்கிறார்.

இது புலவர்க்கு உபதேசம் செய்யும் பதிகம். இது வேறு திவ்யதேசத்தைப் பாடும் பதிகமல்ல. வேறு திருப்பதியைப் பற்றிய பேச்சுமில்லை.

சொன்னால் விரோதமிது ஆகிலும்
சொல்லுவன் கேண்மினோ
என்னாவிலின்கவி யானொருவர்க்கும்
கொடுக்கிலேன்
தென்னாதெனாவென்வண்டுமுரல்
திருவேங்கடத்து
என்னானை என்னப்பன்
எம்பெருமான் உளனாகவே

திருவேங்கடத்து என் ஆனை - வேதத்திற்காட்டில் ஸ்ரீராமாயணத்துக்குள்ள பெருமைபோலே வால்மீகி கவிபாடின விஷயத்தைக் காட்டிலும் தாம் கவி பாடின விஷயத்துக்குண்டான பெருமை. அதனைப் பேசுகிறார். திருவேங்கடவன் நம்மாழ்வார் கவிபாடிக் காட்டின ஆனை ஆவான். அவன் வேண்டினார் வேண்டினத்தைத் தருமவன். அர்ச்சிராதியாகிய போம் வழியைத் தருமவன். ஆதமாவுக்கு உரிய கைங்கர்யத்தைச் செல்வத்தைத் தருமவன். ஆதலால் அவனைக் கவிபாட வாருங்கோள் என்கிறார்.

(ண) எம்பெருமானோடே கலந்து பிரிந்த ஆழ்வார் நாயகி அவன் தானே வருவான் என்று ஆறியிருக்க வேண்டியிருக்கத் தன்னாற்றாமையாலே தலை மகனிருந்த தேசம் நோக்கிப் புறப்படமுயல தோழிமார் 'அவன் வருமளவும் ஆறியிருப்பதே நல்லது. நீ புறப்பட்டுப் போவது முறையல்லை' என்று தடுக்க ஆழ்வார் நாயகி நமக்கு தோழிமார் முதலானாரிடம் பற்று இருப்பதால் அவன் வரவு தாழ்த்தது என நினைத்துத் தனக்கு தோழியர், தாய்மார், மற்றுமுள்ள பந்துக்கள் பக்கல், குலத்தில் உடலில் பெண்மை முதலான பண்புகளில் நசையற்ற படியைத் தெரிவிக்கிற பதிகம் 'நங்கள் வரிவளை ஆயங்காள்' என்பது. அங்கு திருவேங்கடவனை ஆசைப்பட்டு மெலிந்தேன் என்கிறார்.

## லட்டு படி சேவா திட்டம்

| வரிசை எண். | சேவையின் பெயர் | தரிசன அனுமதி | கட்டணம் | பிரஸாதம் |
|---|---|---|---|---|
| (1) | ஆர்ஜித லட்டு படி | 5 | ரூ. 2500 | 30 பெரிய லட்டுகள் |
| (2) | ப்ரோக்தம் (சிறிய) லட்டு படி | 5 | ரூ. 750 | 30 சிறிய லட்டுகள் |
| (3) | மாதிரி (மினி) லட்டு படி | 2 | ரூ. 250 | 10 லட்டுகள் |

நங்கள் வரிவளை ஆயங்காளோ
நம்முடைஎதலாமுன்பு நாணி
நுங்கட்குயானொன்றுரைக்கும்
மாற்றம் நோக்குகின்றேன
எங்கும் காணமாட்டேன்
சங்குசரிந்தன சாயியிழந்தேன்
தடமுலை
பொன்னிறமாய்த தளர்ந்தேன
வெங்கண் பறவையின்பாகன்
எங்கோன்
வேங்கடவானனை வேண்டிச்சென்றே

பரமபததைவிட்டு நமமை வேண்டி வந்தவனை நாம் வேண்டிச் சென்று- நாம ஆசைப்பட்டு சஙகம் சரிந்தன சாயிழந்தேன என்கிறார.

(ந) மாகவைகுநதம காண பதற்கு ஏகமெணணும் மனமுடையராய் எம்பெருமானைக் காணக்கருதும் கண்ணுடைய ரான நம்மாழ்வாரகத எம்பெருமான் இறைவன நானே அனைத்துப்பலன்களையும தருமவன, நானே நாரணன் என்று தன்னைக் காட்டித்தா ஆழ்வார எம்பெருமானுடைய சீல குணத்திலே ஈடுபட்டுப பேசுகிறார. அந்த சீலகுணமுடையவன திருவேஙகடவனலலவா?

இன்றிப்போக இருவினையும்
கெடுத்து
ஒன்றியாக்கை புகாமை
உய்யககொள்வான்
நின்றவேங்கடம் நீள் நிலத்துள்ளது
சென்று தேவர்கள கைதொழு-
வார்களே

இங்கு வேறு திவ்யதேசத் தெம்பெருமானைப் பற்றிப்பேச் சில்லை.

(ந) ஆழ்வார 'வீடுமின முற றவும்' எனற பதிகததில 'எண் பெருக்கநநலதது ஒண பொருளீறில வணபுகழ நாரணன் திண கழல் சேரே' எனறு நாராயண சப்தமும அதன் பொருளும கூறி, கணணன் கழலிணைப பதிகததில 'மாதவன என்றென்று ஓதவல்லீரேல் தீதொனறும அடையா ஏதம் சாராவே' என்று துவயமாகப் பேசுகிறார். 'கண்ணன் கழலிணை நண்ணும் மனமுடையீர, எண்ணும் திருநாமம் திணணம் நாரணமே' என்று தொடஙகி 'மேயான் திருவேங்கடம் காயாமலர் வண்ணன் பேயார முலையுண்ட வாயான் மாதவனே' என்று திருவேங்கடமுடையானை அநுபவித்து 'மாதவனெனறு..... சாராவே' எனறு இறுதியில் பக்தியுடையார செய்யவேண்டுமத்தை உபதேசிககுமிடதது மாதவன் எனறு முடிக்கிறார. திருமநதிரப் பொருளுமவனே, த்வயப்பொருளுமவனே எனகிறார். வேறு திருப்பதி பற்றிய பேசசில்லை. ஒரு பதிகததில் ஸ்ரீவைகுணடததையும் திருவேங்கடமலையையும் என் உடலையும் ஒககவிரும்பினான் என் கிறார.

(ப) 'உலகமுணட பெருவாயா' என்ற பதிகத்தில் 'நான் வேறு கதியிலலாதவன். (கதி-புகல் உன்னைப் பெறத் தடையாக வுள்ள விரோதி போக்கவேணும். உன் திருவடிசேர்வது எந் நாளோ? நித்ய சூரிகளும் வநது அடிமைசெய்கிற திருமலையிலே அடியேனை அடிமை கொள்ள வேணும். அடியேன் உன்னைப் பெற ஸாதநமில்லாதவன். உன் போக்யதை என்னைத தரிக்கமாட்டாதபடி பண்ணுகிறது. நான் அகிஞ்சனன்' எனறு ஆழ்வார் திருவேங்கடமுடையான் திருவடிகளிலே ப்ரபத்தி பண்ணுகிறார். திருவாய்மொழி தீர்கக சரணுகதி. ஆழ்வார் ப்ரபந்நர். திருவேங்கடமுடையான் ப்ரபத்திக்குரிய சரண்யன்.

அகலகில்லேனிறையுமென்று
அலர்மேல் மங்கையுறைமார்பா!
நிகரில் புகழாய்! உலகமூன்றுடை-
யாய்! என்னையாள்வானே!
நிகரிலமரர்முனிக்கணங்கள் விரும்பும்
திருவேங்கடத்தானே
புகலொன்றில்லா அடியேன் உன்னடிக்
கீழ்அமர்ந்து புகுந்தேனே!

என்னையாள்வானே- மிகவும் தாழ்ந்த என்னையும் ஆளுகின்றவனே என்கையாலே ஸௌசீல்யம சொல்லுகிறது. தன் மேனமையும் என் சிறுமையும் பாராதே என்னோடு ஒரு நீராகக் கலக்கையாலே என் கண் பாசம் வைத்த பரஞ்சுடர்ச் சோதியல்லவா அவன்? நிகரிலமரர் முனிக்கணங்கள விரும்பும் திருமலையில் நித்யவாசம் செயபவன. காடுமவேடும வானரமும் தொழ இருப்பவன். ஸௌலப்யம - எளிமை இதறகுப் பொருள. புகலொன்றிலலா அடியேன் - மற்றோர கதியில லாதவனாய் மற்றொருவர்க்குரித்தாகாதபடி உனககே அடிமையானநான. உன்னடிக்கீழ் - உன்னுடைய திவய மஙகளவிக்ரஹத்தை அநுஸந்தித்து அவனே உபாயம் என்ற திணணமான ஜ்ஞானமுடையேனானேன.

ஆக - மணணேரவிண்ணேர்ககும் கண்ணாய் என்னுள் வநது உயிராய் நிற்பவனாய், கற்பகம் போன்றும் கார்முகில்போலும் மிக்கவள்ளலாய், அமுதமாய் விரோதி போக்குமவனாய், போம், வழியைத் தருமவனாய் பரமபதத்தை விட்டு நம்மை வேண்டி வந்தவனாய் நாரணனாய், சுசீலனாய், மாதவனாய் இருக்கும் திருவேங்கடமுடையானைச் சரண் அடைகிறார்.



(தொடர் கட்டுரை)

# ஸஹஸ்ர நாமம்

திரு. T.S. இராஜகோபாலன் - சென்னை.

மஹர்ஷி: கபிலாசார்ய:
க்ருதஜ்ஞோ மேதிநீபதி: ।
த்ரிபதஸ் த்ரிதசாத்யக்ஷ:
மஹாச்ருங்க: க்ருதாந்தக்ருத் ।। 57 ।।

534. மஹர்ஷி: வேதங்களை நன்கு காண வல்ல கபிலரிஷி.

535. கபிலாசார்ய: கபிலாசார்யர் என்று பாராட்டப்பட்டவன்.

536. க்ருதஜ்ஞ: குற்றங்களைக் காணாமல் நல்ல செயல்களையே அறிபவன். (தன் விஷயத்தில் அபராதஞ் செய்த ஸகர புத்ரர்களுக்காக, அவர்களது புத்ரனான அம்சுமானாலே வணங்கப்பட்டதால், இதையே பெரியதாக நினைத்தவன்.)

537. மேதிநீபதி: பூமிக்கு நாயகன்.

தனதே உலகென நின்றான் (4-5-10)

## 20. வராஹ மூர்த்தி

538. த்ரிபத : வராக ரூபியாக இருந்த போது, மூன்று முசுப்புடன் விளங்கியவன், ப்ரணவத்திலுள்ள அ, உ, ம என்ற பதங்களால் விளக்கப்பெறுவோன்.

539. த்ரிதச - அத்யக்ஷ: ப்ரளய கால ஆபத்தில், பிரமன் முதலிய தேவர்களை வராஹ ரூபத்தில் காப்பாற்றிய முதல்வன்.

முதல் மூவர்க்கு முதல்வன்றன்னை (3-6-2)

540. மஹாச்ருங்க: பூமியை நுனியில் கொண்ட கோரப்பல் உடையவன்.

நிலம் கோட்டிடைக் கொண்ட எந்தாய்!
(10-10-6)

541. க்ருதாந்தக்ருத்: யமனைப் போல் கொடிய ஹிரண்யாக்ஷனைக் கொன்றவன்.

மஹாவராஹோ கோவிந்த:
ஸுஷேண: கநகாங்கதீ
குஹ்யோ கபீரோ கஹநோ
குப்தச் சக்ரகதாதர: ।। 58 ।।

542. மஹாவராஹ: பூமியை இடந்தெடுத்த பெரிய வராஹமூர்த்தி.

எறிதிரை வையம் முற்றும், ஏனத்துருவாய்
இடந்தபிரான் (தி.விரு. 99)

543. கோவிந்த: கடலுள் அழுந்திய பூமியை மஹாவராஹ வடிவில் மீட்டுப் பெற்றவன்.

ஏனமாய் நிலம் கீண்ட என் அப்பனே!
(5-7-6)

## 21. மேன்மை

544. ஸுஷேண: தனது திருமேனியின் காந்தியால் அடியார்களை வெல்லும் பஞ்ச உபநிஷத் மயமானவன்.

சுட்டுரைத்த நன்பொன் உன் திருமேனி
ஒளி ஒவ்வாது (3-1-2)
பரஞ்சோதி கோவிந்தா (3-1-3)

545. கநகாங்கதீ: பஞ்ச உபநிஷத்மயமான, மிகச் சிறந்த தோள்வளைகள் அணிந்தவன், உபலக்ஷணமாகத் திருவாபரணங்கள் அணிந்தவன்.

பலபலவே ஆபரணம் (2-5-6)

546. குஹ்ய: பஞ்சோபநிஷத்துக்களால் மாத்திரம் அறியப்பெறுது, வெளிப்படையாகப் புலப்படாத திருமேனி வாய்ந்தவன். பஞ்சோபநிஷத்மயமாகையாலே திருமேனியின் அமைப்பு ஒளியால் மறைந்திருப்பவன்.

எஞ்ஞான்றுநாம்....எஞ்ஞான்றும் எங்கும்
ஒழிவற நிறைந்து நின்ற, மெய்ஞ்ஞானச் சோதிக்
கண்ணனை மேவுதுமே (3-2-7)

547. கபீர: மிகவும் நிர்மலமான திருமேனி, ஈச்வரத் தன்மையால் கம்பீரமானது.

பெருங் கேழலார்தம் பெருங்கண்மலர்
புண்டரீகம் (திவிரு. 45)

[திருக்கண் மலர்கின்ற தாமரை. மற்றை அவயவங்களும் இவ்வாறே எழில் மிக்கன என்பது குறிப்பு.]

548. ககந: திருமேனியின் அழகை ஆழ்ந்து அனுபவிக்க முடியாதவாறு, பேரழகு வாய்ந்தவன்.

எழுவது ஓர் உரு, ஆர்க்கும் அரிவரிதே
(8-5-10)

549. குப்த: இந்த மேன்மையை நன்கறிந்த பூர்வாசார்யர்களால் காக்கப்படுவோன்.

மணியை, வானவர், கண்ணனைத்,
தன்னதோர் அணியை (1-10-11)

[தன்னது ஓர் அணியை-தனக்குத்தானே ஆபரணமானவனை, மணிபோல் காக்கப்படுபவன் என்பது குறிப்பு.]

550. சக்ர-கதா-தர: பரமேஷ்டி, புமாந், விச்வந், நிவ்ருத்தி, சர்வந் என்ற பஞ்ச உபநிஷத் வடிவமான சக்ரம், கதை போன்ற திவ்யாயுதங்கள் ஏந்தியவன்.

சுடராழி சங்கு ஏந்தி (2-3-10)
ஒண்சங்கதை வாள் ஆழியான் (8-8-1)

[ஒண் சங்கு, ஒண் கதை, ஒன் வாள், ஒன் ஆழி. ஒண்மை - ஒளியுடைமை]

வேதா: ஸ்வாங்கோஜித: க்ருஷ்ணோ
த்ருட: ஸங்கர்ஷணோச்யுத: ।
வருணோ வாருணோ வ்ருக்ஷ:
புஷ்கராக்ஷோ மஹாமநா: ।। 59 ।।

551. வேதா: இந்த அளவிடமுடியாத மேன்மை எப்போதும் விளங்குமாறு இருப்பவன்.

புகழும் நல் ஒருவன் என்கோ? (3-4-1)

552. ஸ்வாங்க: இம்மேன்மைக்கு ஏற்றவாறு சத்ரம், சாமரம் போன்ற ராஜ்யாங்கங்கள் உடையவன்.

தனிக்கோல் செல்ல (4-5-1)

[செங்கோல், ஆணை]

553. அஜித: அஜிதை என்ற பேருடைய திவ்யநகரமான ப்ரமபதத்தை உடையவன்.

என்னின் மீதியன்... திண்ணன் வீடு
(2-2-1)

[திண் நல் வீடு - பரமபதம்]

நலம் அந்தம் இல்லதோர்நாடு (9-3-1)

554. க்ருஷ்ண: காளமேகம் போல் கறுத்துக்காண்பதற்கினிய திருமேனி வாய்ந்தவன்.

காராயின காள நன்மேனியினன் (9-3-1)

555. த்ருட: உபாஸகர்களை அநுக்ரஹிக்க, வ்யூஹாவதாரத்தில் சிறிது ஸ்தூல ரூபியாக உள்ளவன்.

திகழும் மணிக்குன்றம் ஒன்றே
ஒத்து நின்றான் (8-7-5)

556. ஸங்கர்ஷண: சேதன அசேதனங்கள் தன்னிடம் சேருமாறு ஆகர்ஷிப்பவன்.

557. அச்யுத: தன் பதவியிலிருந்து ஒருகாலும் நழுவாதவன்.

அயரவாங்கு நமன் தமர்க்கு அரு நஞ்சினை,
அச்சுதன்றன்னை (3-6-8)

558. வருண: தன்னை வரிப்பவர் பலர் வாய்ந்தோன். பக்தர் யாவர் என்று நாடி எங்கும் சூழ்பவன்.

எதிர்சூழல் புக்கு எனைத்தோர் பிறப்புமெனக்கே
அருள்கள் செய்ய (2-7-6)

[எதிர் சூழல் - எதிரே சென்று வளைத்துக் கொள்ளுதல்]

559. வாருண: தன்னை ஸ்வாமியாக வரிப்பவர் பலர் வாய்ந்தவன்.

ஆளராய்த் தொழுவாரும் அமரர்கள் (9-3-10)

560. வ்ருக்ஷ: நிழல் தரும் மரம் போல், அன்பர் தன்னை வந்து அடையுமாறு விளங்குவோன்.

இலம் கதி மற்று ஒன்று எம்மைக்கும்... திருமோகூர்
நலங்கழலவனடிநிழல் தடமின்றி யாமே (10-1-2)

[நலம் கழல் அவனடி நிழல்-அழகிய கழல்கள் அணிந்த திருவடிகளின் நிழல். நிழல்

தடம்- நிழலாகிய பொய்கை]

561. புஷ்கராக்ஷ: கருணை நோக்கால் அன்பர்களை போஷிக்கும் திருக்கண்கள் உடையவன்.

தழுவி நின்ற காதல் தன்னால் தாமரைக்
கண்ணன்றன்னை (4-7-11)

562. மஹாமநா: அன்பரக்கு எவ்வளவு நன்மை செய்தும், இன்னும் செய்யத் திருவுள்ளாமாய், த்ருப்தி பெறாத விசாலமான மனமுடையவன்.

அடியான் இவன் என்று எனக்கு ஆரருள்
செய்யும் நெடியானை (9-4-10)

பகவாந் பகஹா நந்தீ
வனமாலீ ஹலாயுத: ।
ஆதித்யோ ஜ்யோதி ராதித்ய:
ஸஹிஷ்ணுர் கதிஸத்தம: ।। 60 ।।

563. பகவாந்: கல்யாண குணங்களால் பெருமை உடையவன்.

ஆரருள் செய்யும் நெடியானை (9-4-10)

[நெடியான் - பெருமையுடையவன்.]

564. பகஹா: பகம் எனப்பெறும் ஐச்வர்யம், வீர்யம், சக்தி, லக்ஷ்மீ, ஞானம், வைராக்யம் ஆகிய ஆறு குணங்கள் வாய்ந்தோன்.

பலபலவே சோதி, வடிவு, பண்பு, எண்ணில
பலபலவே ஞானமும் பாம்பணை
மேலாற்கேயோ (2-5-6)

565. நந்தீ: ஸங்கர்ஷணனான தான் பலராமனாக அவதரித்து, நந்தகோபரைத் தந்தையாகப் பெற்றவன்.

நந்த கோபாலன்றன் இன்னுயிர்ச்
சிறுவனே! (8-1-3)

ஆநந்தீ-ஆயர் பெண்களுடன் செய்த லீலையால் ஆனந்தம் கொண்டவன் (கண்ணன்).

566. வநமாலீ: பரிமளம் மிக்க வைஜயந்தி என்ற திருமாலை வேய்ந்தவன்.

துளிக்கும் நறுங்கண்ணீத் தூமணி
வண்ணன் (3-7-6)

567. ஹலாயுத: பலராமனாகக் கலப்பையை ஆயுதமாகக் கொண்டவன்.

568. ஆதித்ய: முற்பிறப்பில் அதிதியாயிருந்த தேவகியின் திருமகன், தனக்கு வாசகமான அகாரத்தின் பொருளானவன்.

## 22. நரநாராயணன்

569. ஜ்யோதி ராதித்ய: அப்ராக்ருதமாய் ஆச்சர்யமான சோதி வாய்ந்த ஆதித்யன்.

எனது ஆருயிர், கெழுமிய கதிர்ச்
சோதியை (3-6-7)

570. ஸஹிஷ்ணு: பிரமன் முதலான அடியார்களது அபராதங்களைப் பொறுத்துக் கொள்பவன்.

அளிமிக்கான் (4-8-5)

571. கதிஸத்தம: உத்தமமான தர்ம நெறியை உபதேசிப்பவன்; அதாவது, ஆசார்யனாய் விளங்குவதால், சிறந்த புகலானவன்.

நீ அம்மா காட்டும் நெறி (பெ.திரு. 8)

[நீ காட்டும் நெறி; ஆசார்யனாய்]

ஸுதந்வா கண்ட பரசுர்
தாருணோ த்ரவிணப்ரத: ।
திவிஸ்ப்ருக் ஸர்வத்ருக் வ்யாஸோ
வாசஸ்பதி ரயோநிஜ: ।। 61 ।।

572. ஸுதந்வா: அமுதம் தோன்றிய போது கலகஞ் செய்த அசுரர்களைத் தாக்குவதற்காக வலியவில் ஏந்தியவன்.

573. கண்டபரசு: ருத்ரனுடன் செய்த போரில் அவனது பரசுவைத் துண்டித்தவன்.

574. தாருண: இவ்வாறு பகைவர்களை அழிப்பதில் பயங்கரமானவன்.

அசுரர்ச் செற்ற, மாவியம் புள்வல்ல
மாதவன் (தி.விரு. 67)

இகலிடத்து அசுரர்கள் கூற்றம் (9-9-2)

[இகல்-பகை.]

## 23. வ்யாஸாவதாரம்

575. த்ரவிணப்ரத: தனம் போலே சாஸ்த்ரங்களும் அவற்றின் பொருள்களும் அளிப்பவன்.

576. திவிஸ்ப்ருக்: கண்ணுக்கு இலக்கா தவற்றையும் அறியவல்ல சிறந்த ஞானம் உடையவன். பரவித்யையால் பரமபதத்தில் இருக்கும் தத்வ ரஹஸ்யத்தையும் அறிந்தவன்.

577. ஸர்வத்ருக்: எல்லாவற்றையும் கண்டறிபவன்.

578. வ்யாஸ: வேதங்களை வகுத்ததால், வ்யாஸன் என்று பேர்பெற்ற முனிவனிடத்து ஆவேசித்த பகவான்.

579. வாசஸ்பதி: இந்த ரூபியாய், மஹா பாரதமாகிய ஐந்தாவது வேதத்திற்குத் தலைவன்.

580. அயோநிஜ: பிறவாமல், பகவானது வாக்கிலிருந்து உண்டானவன.

*த்ரிஸாமா ஸாமக: ஸாம*
*நிர்வாணம் பேஷஜம் பிஷக் ।*
*ஸந்யாஸக்ருத் சம: சாந்தோ*
*நிஷ்டா சாந்தி: பராயணம் ।। 62 ।।*

581. த்ரிஸாமா: தானும் மூவகை ஸாமங்களால் துதிக்கப்பெறுபவன. இவை ப்ருஹத்-ரதந்தரம், வாமதேவ்யம என்பன.

582. ஸாமக: ஆனந்தத்தால் தானும் இந்த ஸாமங்களை கானம செய்பவன.

583. ஸாம: தன்னைப் பாடுவோரது பாவங்களைப் போக்கவல்லவன்.

*வினையேன் வினைதீர் மருந்தானாய்*
(1-5-6)

584. நிர்வாணம்: இவ்வாறு பாவம தீர்ந்தவர்களுக்குப் பரம கதியாய், முக்தி ஸ்வ ரூபனானவன்.

*...திருப்பேரான்-தெளிதாகிய சேண் விசும்பு-தருவானே* (10-8-4)

585. பேஷஜம்: பிறவி நீங்குவதற்கான மருந்து.

*நங்கள் பிணிக்குப் பெருமருந்து பின்*
(பெ.திரு. 63)

586. பிஷக்: நோயின் காரணம் அறிந்து அதைத் தீர்க்க வல்லவன். மருத்துவன்.

*வைப்பாம், மருந்தாம் - அடியரை, வல்வினைத்*
*துப்பாம் புலன் ஐந்தும் துஞ்சக்கொடான்*
*அவன்* (1-7-2)

[வைப்பு-தன்னை அடியார் அனுபவிக்க நிதி போன்றவன். மருந்து-விரோதங்களைப் போக்குவோன். துப்புஆம்...கொடான் - வலிமை மிக்க புலன்களாலே இவர்கள் துன்பமுறுமல் காப்பவன்.]

587. ஸந்யாஸக்ருத்: பிறவி நோய் தீருவதற்குக் காரணமாக ஸத்வ குணத்தில் ஊன்றியிருக்கச் செய்து, மற்ற இரண்டு குணங்களையும் அகற்றுவோன்.

*பிறவித் துயர் அற ஞானத்துள் நின்று*
(1-7-1)

588. சம: அடக்கவேண்டியவைகளான காமம், க்ரோதம் போல்வனவற்றை அடக்க வழி காட்டியவன்.

589. சாந்த: அலை ஓய்ந்த கடல்போல் சாந்தமூர்த்தியானவன்.

590. நிஷ்டா: விரக்தி வாய்ந்த மஹான்களது உள்ளம் நிலைக்கும் இடமாக விளங்குவோன்.

*உன்னைக்காணக் கருதி, என் நெஞ்சத்து*
*இருத்தாக இருத்தினேன்* (9-4-6)

591. சாந்தி: தன்னை இவர்கள் அனுபவிக்கும்போது, தம்மை மறக்கும்படி விளங்குவோன்.

*ஆர் உயிர்பட்டது, எனது உயிர் பட்டது?*
(9-6-9)

[பகவானை அனுபவிக்கும் போது, நான் பட்டது யார் பட்டார்? என்னை அறமறந்தேன் என்பது.]

592. பராயணம்: இவர்கள் மோக்ஷ பெறுவதற்காகப் பரம பக்தியைத் தரும் உபாயமானவன்.

*அந்தாமத்து அன்பு செய்து* 2-5-1)

[அம் தாமம் - பரமபதம்.]

(தொடரும்)

☆☆☆☆☆☆☆☆☆



# திருவேங்கடச் சோடச மாலை

டாக்டர் வே. இரா. மாதவன் - தஞ்சாவூர்.



சோடசம் என்பது பதினாறு என்ற எண்ணிக்கையைக் குறிக்கும். சோடச முத்திரை, சோடசவுபசாரம், பதினாறு மங்கலங்கள், பதினாறு பேறுகள் என இவ்வாறு பலவற்றைக் கூறலாம்.

புகழ், கல்வி, வலி, வெற்றி, நன்மக்கள், பொன், நெல், நல்லூழ், நுகர்ச்சி, அறிவு, அழகு, பெருமை, இளமை, துணிவு, நோயின்மை, வாழ்நாள் போன்ற பதினாறு பேறுகளையும் பெற விழைவோர் அனைவரும், தேனார் பூஞ்சோலைத் திருவேங்கட மாமலையானைப் பாடித்தொழுவது தொன்றுதொட்டு இன்றுவரை தொடர்ந்து வரும் பழக்கமாகவுள்ளது.

இன்றிப்போக இருவினையும்
கெடுத்து,
ஒன்றி யாக்கை புகாமை
உய்யக் கொள்வான்
நின்ற வேங்கடம் நீணிலத்துள்ளது
சென்று தேவர்கள் கைதொழு
வார்களே (திருவாய் 9-3-8)

என்னும் நம்மாழ்வாரின் மொழிக்கேற்ப, அமரர்களும் வந்து தொழுகின்ற திருவேங்கடமலையின் சிறப்பையும், இங்கே நின்ற திருக்கோலத்தில் அனைவர் உள்ளங்களையும் கொள்ளைகொண்டு பேரருள் ஒளி வீசிவரும் திருமாலின் பெருமைகளைப் பதினாறு பாடல்களில் கூறுவதே திருவேங்கடச் சோடசமாலையாகும். சிதம்பரம் திரு. நீ. சண்முக சுவாமிகள் அறுபது ஆண்டுகட்கு முன்பு இயற்றியருளிய இப்பிரபந்தத்தை இனிக்காண்போம்.

பூமகளும் மலர்மகளும் பொலியவரு
பூந்துகிலான் புனிதன் வேதப்
பாமகிழச் சிறந்தொளிரும் பத்தர்மனக்
குகைவளரும் பரமன் நாளும்
ஓமநிறை வேங்கடமே உவந்தருளும்
உத்தமனாம் ஒருத்தன் நாளை
ஏமமெனக் கருதுமவர் இடர்ப்பிறவி
இரிந்துபரந் தாமஞ் சேர்வார்.



பூதேவியும் சீதேவியும் உடனுறையவும், அரனும் அயனும் அருகிருந்து மகிழவும், பக்தர் மனங்களிலே நித்திய வாசம் செய்து, நாளும் பல யாகங்களை உவந்து ஏற்றுத் திருவேங்கடத்தில் நின்றருளும் திருமாலின் திருவடிகளையே இன்பமென எண்ணித் தொழுபவர்கள் பிறவித்துன்பத்தினின்றும் விடுபட்டு ஆனந்தமயமான வைகுந்த பதவி அடையவர்.

சேர்ந்தாரைத் தனதுருவாய்ச்
செய்திருவேங்
கடவோங்கற் திகழும் மாலைச்
சார்ந்தாரே எங்கள்குலச் சற்குருவாம்
எனக்கருதிச் சாந்தம் பூத்து
நேர்நதாரைக் கைதொழுது நிமலமணி
வண்ணனருள் நெருங்கி வாழ
ஓர்ந்தாரே இவ்வுலகில் உண்மைதனை
உணர்ந்துபரம் உறுவோர மாதோ.

தம்மிடம் சரண் புகுந்த, பிரபத்திமிக்க அடியார்களைத் தமது உருவாகவே தோன்றச் செய்வது திருவேங்கடமலையானின் தனிச் சிறப்பாகும். அத்தகைய திருமாலடியாரை வணங்கி மகிழும் தெளிவு பெற்றோர் இவ்வுலக வாழ்க்கையின் உண்மை உணர்ந்து வீடுபேறு அடைவது உறுதியாம்.

மாதொருகூ றுடையபிரான்
வலத்தமைய
மகிழ்ந்துயிர்க்கு வழங்கு மாலைத்
தீதொருவித் திகழ்ஞானம் சிறக்குமொரு
வேங்கடத்தில் தெரிசித் தோர்கள்
ஏதமிலாப் பரந்தாமத் திருந்திடுவர்
இமையவரும் ஏத்த வாழ்வார்
சாதலொடு பிறப்பறுத்துத் தனித்
தலைமை
உறுவரிது சரதந் தானே.

உமையொரு பாகனாகிய சிவபெருமானையும் தம்முடன் சேர்த்து நாராயணனாகத் தோன்றி, அனைத்து உயர்கட்கும் இன்பமளிக்கும் ஈசனாகத் திகழும் திருமாலை, தீமைகளை அழித்து ஞானம் ஒன்றே நல்கும் திருவேங்கடத்தில் கண்ணுறக் கண்டு மகிழ்ந்தவர்கள் தேவரும் போற்ற வாழ்வார்கள்.

அத்துடன், பிறப்பும் இறப்பும் இல்லாப் பேரின்ப வாழ்வும் பெற்று, உயர்ந்ததாம் வைகுந்த பதவியும் அடையவர் என்பதில் எவ்வித ஐயமுமில்லை.

ஊனேயுங் குடிலுடலை உவர்த்தினிய
ஒருமுதலை உணர்ந்தோர் வாழும்
கானேயுங் கற்பகமே எனக்கருதும்
வேங்கடத்தைக கருத்தில் ஊன்றி
மானேயுங் விழிநிகர்த்த மங்கையர்தம்
மையல்வலை தடிந்து நாளும்
தேனேயும் திருத்துளவத் தெரியலணி
திருமாலைத் தேர்ந்து வாழ்வாம்.

மாதர் போகத்தில் மயங்கித் திரிந்து உழலாமல், 'ஊனேறு செல்வத் துடற்பிறவி யான் வேண்டேன், செம்பவள வாயான் திருவேங்கடமென்னும், எம்பெருமான் பொன்மலை மேல் ஏதேனும் ஆவேனே' என்னும் குலசேகரப் பெருமான் மொழிக்கேற்ப இத்திருமலையைச் சேர்ந்து, வண்டுகள் மொய்க்கும் திருத்துளவ மாலையணிந்து காட்சியருளும் திருமாலின் திருவடிகளையே தொழுவோமாக.

மூலமென அந்நாளில் மொழிந்-
தழைத்த
முரண்களிற்றைப் புரந்த மாலைக்
கோலநிறைக் கொத்தலருங்
குளிர்வனங்கொள்
வேங்கடத்தில குறித்து வீரக்
காலன்நமைக் கடியவரக் கருதுறு
மோர்
கருத்தகற்றிக் களித்து வேதச்
சீலமுறு சிந்தையர்தம் திருக்குழுவிற்
திளைத்துபரந் தாமஞ் சேர்வாம்.

ஆதிமூலமே என்றழைத்த கஜேந்திரனுக்கு அருளிய திருமால் உறையும் திருத்தலமே திருவேங்கடமாகும். இத்திருமலையைச் சார்ந்தவர்க்கு இயம பயம் என்பதே இல்லை. இவ்வுண்மையறிந்து, இங்கே அனுதினமும் கூடிமகிழும் திருமாலடியார்தம் ' திருக்கூட்டத்தில் நாமும் கூடி, பரந்தாமனின் பதம் பெறுவோமாக.

ஆறெடு நான்கு அவதாரத்து
அண்ணல் அரன்
அயனாக அமர்ந்தோன் மேனாள்
வீறெடுநற் திருவுடைய மதில்
இலங்கை
மன்மாள வீழ்த்தி வீயா
மாறெடெதிர் கஞ்சன்தன் மனம்
இரித்து
மகிதலத்தோர் மகிழ ஓங்குஞ்
சாறெடுதேன் கலந்தினிக்கும்
வேங்கடத்தின்
தனிமுதலைச் சார்ந்து வழ்வாம்.

'வாசமாமலர் நாறுவார்பொழில் சூழ்தரும் உலகுக்கெல்லாம் தேசமாய்த் திகழும் மலைத் திருவேங்கடம்' என்பர் திருமங்கையாழ்வார் (பெரியதிருமொழி 1-8-9). இத்திருமலையிலே, அரனாகவும் அயனாகவும் அருள்சுரந்து, இரா



வணனை அழித்த இராம னாகவும், கஞசனை அழித்த கண்ணனாகவும், மற்றுமுள்ள அவதாரத் தோற்றங்களாகவும் காட்சி தரும் தனியொரு முதல்வ னான திருவேங்கடத்தானையே தொழுவோமாக.

மும்மலமும் ஒருங்ககற்றி முழுஞானம்
ஒளிக்குமொரு முகுந்தன் தாளைச்
செம்மனத்திற் சேர்ந்தொளிருந்
திருவிடையார்
திருப்பனியைத் தேர்ந்து நாளும்
வெம்மைவினை வேரறுத்து
வேஙகடததில்
அவனருளை விதியால் மேவி
இம்மையினும் மறுமையினும் எய்தரிய
பேரினபம் எய்து வோமே.

ஆணவம், மாயை, காமியம் என்னும் மும்மலங்களை முழு வதுமாகப் போக்கி, உண்மை யாம் மெய்ஞ்ஞானத்தை நல்கு பவன் முகுந்தனாகிய கோவிந் தன். அவன் திருவடிக ளையே சிந்தித்து, நாளும் சேவை செய்துவரும் அடியார் கள் நிறைந்த திருவேங்கடத்தில், அவன் அருளால் அவன் தாள் வணங்கி மகிழ்வது, இம்மையி லும் மறுமையிலும் அடையக் கூடிய இன்பங்களுக்கெல்லாம் உயர்ந்த பேரின்பமாம். அப்பே ரின்பத்தை நாமும் அடைவோ மாக.

இப்புவியில் நற்பதியாம்
எழிலுறுவேங்
கடமதனில் இருந்து நோக்கின்
அப்பிழிய அரியணையில் அமர்ந்
தருளும்
அந்தணனை அருச்சித் தேத்தி
ஒப்பரிய அவன்திருத்தாள்
உளத்தடைத்த
உத்தமர்கள் உளமே சார்ந்து
செப்பரிய பரந்தாமத்து எல்லையுறும்
நற்கதியைத் தேர்ந்து வாழ்வாம்.

பூவுலகிலுள்ள தலங்களுக் கெல்லாம் தலையாயதான இத் திருப்பதியில், சிறப்புமிக்க திரு வேங்கடமாமலையிலே கோயில் கொண்டிருக்கும் திருமாலவனுக் குப் பாமாலைகள் சூட்டி மகிழ்ந்து, அவன் திருவடிக ளையே நினைந்திருக்கும் உத்தம அடியார் மனம் மகிழ வணங் குவோம். இதன்வழி, சொல்லு தற்கரிதான வைகுந்தமடையும் நற்பேற்றையும் நாம் அடை வோம்.

காடோடி மலையோடிக் கடியதவம்
புரிவதனைக் கடிந்து கஞ்சத்
தோடோடு வதிமயிலார்
துணைவனார்
திருவடியைச் சூழ்ந்து மாலசெய்
நாடோடு கூர்அயில்கண் நல்லார்தம்
இச்சையெல்லாம் நலிய மோட்ச
வீடோட வேங்கடத்தில் வீற்றிருக்கும்
மன்னவரை விரும்பி வாழ்வாம்.

இவ்வுலக இச்சைகளையும் ஆசாபாசங்களையும் களைய வேண்டி, மலைகளையும் காடு களையும் அடைந்து கடுந்தவங் களை மேற்கொள்ள வேண்டிய தேவையே இல்லை. வைகுந்த நாயகனாய், வருவோர்க்கு வாழ் வளிக்கும் மன்னவனாய், வாச மாமலர்த் தாமரையிலே வீற் றிருக்கும் திருமகள் கேள்வ னாய் விளங்கும் திருவேங்கடமு டையான் திருவடிகளை வணங் கினாலே போதும், நம் துன் பங்கள் எல்லாம் விலகும்.

இத்தரையில நந்தியவர்க்கு
இனிப்பிறவா
வரமருள எழுந்து தோன்றும்
வித்தெனக்கொள் வேங்கடத்தின்
விமலதிரு
விண்டுவினை விதியிற் காணும்
பத்கர்திரு வடித்தூளிப் பாக்கியமுற்று
எந்நாளும் பரம சாந்த
முத்திபெறும் அவரிருக்கும் முதல்வேத
மொழிந்த பொருள்உணர்ந்
தோர்தாமே

'பரன் சென்று சேர் திருவேங் கடமாமலை ஒன்றுமே தொழ நம் வினை யோயுமே' என்ற ஆழ்வாரின் (திருவாய் 3-3-8) வாக்கின்படி, இப்பூவு லகில் பிறந்தோர் இனியும் இத்துன்பச்சுழலில் வருந்தாதி ருக்க, மீண்டும் பிறவா வரமரு ளும் திருவேங்டவனைச் சரண் புகுந்த தொண்டர்தம் பாதத்தூ ளிகளைத் தொழுவதே பெரும் பாக்கியமாகும். இதுவே ஆன் றோர் காட்டும் அற்புத வழியா கும்.

ஒருகுடையின் நிழற்கீழ்இவ்
வுலகமெலாம்
புரப்பதிலும் ஒளிசேர மார்பிற்
திருவுடையான் திருப்பதியைத்
தினவலஞ்செய்
திருத்தொண்டர்க்கு ஏவல் செய்து
கருவடையா நெறிகாட்டும்
கையிலுறும்
ஐயமதைக் கருதி நாளும்
குருவடையக் குறித்துவினை
இரிப்பதுவே
எஞ்ஞான்றும் குறைவி லாதாம்.

'உறவுசுற்ற மென்றொன் றில்லா ஒருவன் உகந்தவர் தம்மை மண்மிசைப் பிறவியே கெடுப்பான்' என்னும் திருமங் கையாழ்வாரின் (பெரிய திரு மொழி 2-1-2) மொழியுணர்ந்த அடியார்கள், திருவுக்கும் திரு வாகிய செல்வனால் எல்லா உலகங்களையும் காத்தளிக் கும் திருவேங்டவன் உறையும் இத்திருத்தலத்தை நாள்தோறும் வலம் வருவர். இத்தகைய திருத்தொண்டர்களுக்குப் பணி செய்வது நம் பழவினையைப் போக்கும். இனி இவ்வுலகில் பிறந்துழலும் துன்பநிலையும் தொடராது.

வேதமொடு பலகலையும் விளம்பவரு
வேங்கடமே வேண்டி என்றும்
ஏதமிலாப் பெருவாழ்வை
இனிதளிக்கும்
எம்பெருமான் இறைமை நல்கிப்
போதனைத்தன் உந்தியினிற்

பொறிததுலகை
அளித்துயிரைப் போறறிக காக்கும்
நாதனுருக் கொண்டிலகும்
நந்துடையான
தனிச்சரணை நணுகி வாழ்வாம்.

பூவுலகைப் படைக்கும் பிரமனைத்தன் உந்திக் கமலத்திலே தாங்கிய தாமோதரனாய், குற்றமொன்றில்லா வாழ்வுதரும் கோவிந்தனாய், சங்கமேந்தும் நாராயணனாய் விளங்குபவன் திருவேங்கடவன். மூவரில் முதல்வனான அவன் விரும்பி உறையும் திருத்தலமடைந்து, அவன திருமலரடி நிழல் அருகிலிருக்கும் பெருநிலையை நாமும் பெறுவோமாக.

கண்டாரின் கலகவினைக்
கட்டறுத்துக்
கதியளிக்கும் கவின்சேர் ஞானம்
கொண்டாரக்கும் உணர்வரிய
ஒருதிருவேங்
கடம்இடமாக் கொண்டு மேனாள்
விண்டேந்தி மழையகற்றி
விண்ணவரைத்
தன்பணிகொள் வேத நாதத்
தண்டேந்தும் ஒருமுதலைத்
தனித்தலைமைக்
கருமுகிலைச் சார்ந்து வாழ்வாம்

ஆயர்களையும் ஆநிரைகளையும் காக்க அன்று குன்றமேந்திக் குளிர்மழை தவிர்த்து, அசுரர்களை அழித்த கோபாலனே தண்டொடு சக்கரம் சார்ங்கமேந்தும் தனி முதல்வனாக இன்று இந்தத் திருவேங்கடத்திலே காட்சி தருகின்றான். தம்மைத் தரிசித்தோர் தம் குறைகள் தீர்த்து, வேண்டுவார்க்கு வேண்டுவரமளிக்கும் விமலனாய், கருமா முகிலுருக் கண்ணனாய் விளங்கும் திருமாலவன் வதியும் இத்திருமலையின் அறிய பெருமைகளைப் போற்றி அவன்தாள் சரணடைவோமாக.

மின்னவிரும் பூந்துகிலும்
விளங்குகவுத்
துவமணியும் வினையை வீட்டிப்
பொன்னகரிற் புகுத்தும்ஒரு பூவாளி
தனையும்உளம பூண்டு நாளும்
இன்னருள்கொண்டு எழுந்தருளி
யிருந்துயிரின்
இருவினையை இரித்துக் காக்கும்
நன்னகராம் திருவிருக்கும்
நலமிகுவேங்
கடமதனை நணுகி வாழ்வாம்.

புத்தொளி வீசும் பீதாம்பரமும், மார்பிலே பொலியும் கவுத்துவமணியும், பழவினை போக்கிப் பரமபதம் காட்டும் பங்கய வரதங்களும் கொண்ட நெடுமாலவன் காட்சிதரும் திருமலையைச் சேர்ந்து வணங்குவோமாக.

செஞ்சமரிற் பந்துசனம் சேதவரும்
என்றவனைச் சிறந்த ஞானம்
விஞ்சவரச் செய்துபர வினை
முடித்துக்
கதியளித்த விபுதன் பாரில்
நெஞ்சமுறத் தன்னடியை
நினைத்தவர்க்குப்
பரிந்தளிக்கும் நேமி நாதன்
மஞ்சமரும் வேங்கடத்தில் உருதெய்வ
நாயகனை மதித்து வாழ்வாம்!

பாரதப் போரிலே பார்த்தனுக்குச் சாரதியாய் அமர்ந்து, பகவத் கீதையை உபதேசித்து, செயல் முடித்து அருள்செய்த தெய்வநாயகனாம் கண்ணனே இன்று, தன் திருவடி தொழும் அன்பர்கள் மனம் மகிழக் கார் மேக வண்ணனாய் இத்திருவேங்கடத்திலே காட்சி தருகின்ருன். அவன் கமலமலர்ப் பதம் போற்றி வணங்குவோமாக.

செந்திலுறைக் குருபரனாம் சிவஞானச்
செவ்வேளைத் திருத்த நாளும்
இந்திரனும் வணங்கவரும் எழில்மருக
னெனக்கொள்இறை யேதம் சாராப்
புந்தியவர் புகழ்ந்தேத்தும் பூமகளுக்கு
உறுகேள்வன் புரிந்து வாழும்
சந்திரன்நற் திருமுடியில்
தவழ்ந் தொளிரும்
வேங்கடத்தைச் சார்ந்து
வாழ்வாம்

இந்திரனோடு பிரமன் ஈசன் இமையவரெல்லாம் மந்திர மாமலர் கொண்டு வணங்கித் துதிக்க, திருமடந்தை மண் மடந்தை இருபாலும் திகழ, அடியவர் தீவினைகளெல்லாம் அகற்றும் திருமறு மார்வன் குடிகொண்ட திருவேங்கடமாமலையின் பெருமைகளைக் கண்ணுரக் கண்டு, நெஞ்சமெல்லாம் உணர்ந்து, நாளும் வணங்கி நற்கதி பெறுவோமாக.

இத்திருவேங்கடச் சோடச மாலையிலே உள்ள பதினாறு பாடல்களிலும் திருமாலையின் சிறப்பையும், திருமலை வாசனின் பெருமைகளையும் ஆசிரியர் மிகமிக அருமையாகவும்

## விண்ணப்பம்

**தி.தி. தேவஸ்தான கோயில்களில் மற்றும் திருமலை ஸ்ரீவேங்கடேஸ்வரர் கோயிலில் நடைபெறும் ஆர்ஜித ஸேவைகளுக்காக அனுப்பப்படும் கட்டணத்தொகையினை தேசியமயமாக்கப்பட்ட வங்கிகளில் மட்டுமே பெறப்பட்ட 'டிமாண்ட் டிராப்ட்' D.D. அல்லது 'பேஆர்டர்' (Pay order) மூலமாக அனுப்புமாறு பக்தர்கள் கேட்டுக்கொள்ளப்படுகிருர்கள். 'செக்' (Cheque)குகளை அனுப்புவதால் கால விரயமும், நிர்வாகச் சிக்கலும் மேலாண்மைக்கு ஏற்படுகின்றது என்பதைத் தெரிவித்துக்கொள்கிறோம்.**

எளிதாகவும் எடுத்துக்கூறி அடியவர்களை ஆற்றுப்படுத்துவதைக் காணலாம்.

ஓமநிறை வேங்கடம் (1), சேர்ந்தாரைத் தனதுருவாய்ச் செய் திருவேங்கடம் (2), தீதொருவித் திகழ் ஞானஞ் சிறக்குமொரு வேங்கடம் (3), கானேயுங் கற்பகமே எனககருதும் வேங்கடம் (4), ஒங்குஞ்சாறெடு தேன் கலந்தினிக்கும் வேங்கடம் (6), இப்புவியில் நற்பதியாம் எழிலுறு வேங்கடம் (8), இத்தரையில் நந்தியவர்க்கு இனிப்பிறவா வரமருள எழுந்து தோன்றும் வித்தெனக் கொள் வேங்கடம் (10), வேதமொடு பலகலையும் விளம்பவரு வேங்கடம் (12) ஞானம் கொண்டார்க்கும் உணர்வரிய ஒரு திரு வேங்கடம் (13), திருவிருக்கும் நலமிகு வேங்கடம் (14), மஞ்சமரும் வேங்கடம் (15), சந்திரன்நற் திருமுடியில் தவழ்ந்தொளிரும் வேங்கடம் (16) என இவ்வாறு திருவேங்கடத்தினை இவர் பலவாறு சிறப்பிக்கக் காணலாம்.

அகல கில்லே னிறையுமென்
  றலர்மேல் மங்கை யுறைமார்பா,
நிகரில் புகழா யுலகமூன்
  றுடையா யென்னை யாள்வானே.
நிகரில் அமரர் முனிககணங்கள்
  விரும்பும் திருவேங் கடத்தானே
புகலொன் றில்லா வடியேனுன்
  அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே.
(திருவாய். 6-10-10)

என்பார் நம்மாழ்வார்.

இத்தகு ஆழ்வார்கள் திருவேங்கடத்தானைப் போற்றிய வழியைப் பின்பற்றியே இச் சோடசமாலையும் புகழக் காண்கிறோம். இத்தகைய திருப்பாசுரங்களால் நாளும் அவன் புகழ் பாடி நாமும் நலம்பல பெறுவோமாக. 

## தினசரி உத்ஸவங்கள்

| | |
|---|---|
| 1) கல்யாணோத்ஸவம் | ரூ. 2500/- காலை 10 மணிக்கு. 5, நபர்கள் அனுமதிக்கப்படுவர். அன்பளிப்பு : இரவிக்கைத்துண்டு, உத்தரீயம், பெரியலட்டு 5 வடை 5, அப்பம் 5, தோசை 5, சர்க்கரைப் பொங்கல், பொங்கல், புளியோதரை, தத்யோதனம், (ஒவ்வொன்றும் 1/16 சோலா அளவு.) |
| 2) சிறப்பு கல்யாணோத்ஸவம் | ரூ. 750/- காலை 10 மணிக்கு. 2 நபர்கள் அனுமதிக்கப்படுவர். அன்பளிப்பு : உத்தரீயம் ஒன்று, இரவிக்கைத்துண்டு ஒன்று, பெரியலட்டு, 1 வடை 1 |
| 3) ஆர்ஜித பிரமோத்ஸவம் | ரூ. 500/- (நாள் ஒன்றிற்கு) மதியம் 1 மணிக்கு. 5 நபர்கள் அனுமதிக்கப்படுவர். தரப்படும் வாகனங்கள் : (1) பெரிய சேஷ வாகனம், (2) வெள்ளி கருட வாகனம் (3) வெள்ளி அனுமந்த வாகனம். |
| 4) தோலோத்ஸவம் அல்லது ஊஞ்சல் சேவை | ரூ. 750/- மதியம் 1-30 மணிக்கு. 6 நபர்கள் அனுமதிக்கப்படுவர். கோயிலுக்குள் உள்ள கண்ணாடி அறையில் இச்சேவை நடைபெறும். அன்பளிப்பு: சேஷவஸ்த்ரம் ஒன்று. |
| 5) வசந்தோத்ஸவம் | ரூ. 3000/- (நாள் ஒன்றிற்கு) மதியம் 2 மணிக்கு. 10 நபர்கள் அனுமதிக்கப்படுவர். அன்பளிப்பு : வஸ்த்ரம், 6 வடைகள், 20 தோசைகள், தத்யோதனம், புளியோதரை, பொங்கல், சர்க்கரைப்பொங்கல் |
| 6) ஸகஸ்ர தீபாலங்கார சேவை | ரூ. 500/- மாலை 5-30 மணிக்கு. கோயில் வளாகத்திற்கு வெளியே நடைபெறும் சேவைக்குப்பிறகு, வைகுண்டம் 'க்யூ' கட்டிடம் வழியாக 5 நபர்கள் தரிசனத்திற்கு அனுமதிக்கப்படுவர். அன்பளிப்பு : வஸ்த்ரம் ஒன்று. |

மேற்குறிப்பிட்ட சேவைகளுக்கு 90 நாட்களுக்கு முன்பேயே முன்பதிவு செய்து கொள்ளலாம்.

## அபிஷேக சேவை

திருமலை திருப்பதி தேவஸ்தான மேலாண்மையின் கீழ் செயற்படும் கீழ்வரும் கோயில்களில் நபர் ஒருவர் ரூ.5/- செலுத்தி வாராந்திர அபிஷேக சேவைகளைக் கண்டு களிக்கலாம்.

1) ஸ்ரீவேதநாராயணசுவாமி கோயில், நாகலாபுரம்.
2) ஸ்ரீகல்யாண வேங்கடேஸ்வர சுவாமிகோயில், நாராயணவனம்.
3) ஸ்ரீவேணுகோபாலசுவாமி கோயில், கார்வேட்டுநகரம்.
4) ஸ்ரீபிரசன்ன வேங்கடேஸ்வரசுவாமி கோயில், அப்பளாயகுண்ட்டா.
5) ஸ்ரீவேங்கடேஸ்வரசுவாமி கோயில், ஸ்ரீநிவாசமங்காபுரம்.
6) ஸ்ரீவேங்கடேஸ்வரர் மற்றும் ஸ்ரீசந்திரமௌலீஸ்வர சுவாமி கோயில்கள், ரிஷிகேஷ்.

# நவராத்திரி வழிபாடு

திருமதி. சு. பொன்னம்மாள் - புத்தூர்.

பூத்தவளே! புவனம் பதினான்கையும்
பூத்தவண்ணம்
காத்தவளே! பின்கரந்தவளே!
கறைக் கண்டனுக்கு
மூத்தவளே! என்றும் மூவா
முகுந்தற்கு இளையவளே
மாத்தவளே! உன்னை அன்றி மற்றும்
ஓர்தெய்வம் வந்திப்பதே!
-அபிராமி அந்தாதி

நம் பாரதநாடு பழமையான பண்பாடு மிகுந்தநாடு என்ருல் மிகையாகாது. அதற்குக்காரணம் ஆன்மீகம் இந்த நாட்டில் வேரூன்றி நின்று நிலவி இருப்பதால்தான். உலகப்பண்பாட்டிற்கே ஆன்மீகத்தைக் கொடுத்து உதவியது நம் நாடு. இப்புண்ணிய பூமியில் தவநெறிச் சான்ருேர்கள் பலர் தோன்றி ஆன்மீகத்தை வளர்த்தனர். ஆன்மீக வளர்ச்சிக்குத் தீவிரச் சமயச் சடங்குகள் அடிப்படையாக அமைந்தன. அதன் பயனாக வழிபாடுகளும் விழாக்களும் பெருகின. அந்தவகையில் நவராத்திரி வழிபாடு பற்றி விளக்குவதே இக் கட்டுரை.

## சிவசக்தி வழிபாடு

உலகிலேயே மிகப்பழமையான நாகரீகச் சின்னமாக விளங்கும் சிந்துவெளிப்பிரதேசத்தில் அகழ்ந்தெடுக்கப்பட்ட மொகஞ்சொதாரோ ஹாரப்பா நகரங்கள் விளங்குகின்றன. இந்தப் புதையல் நகரங்களில் சிறியதும் பெரியதுமான சுமார் 200 சிவலிங்க அடையாளங்களும் அதற்கு மேற்பட்ட சக்தி வழிபாட்டு அடையாளங்களும் கிடைத்திருக்கிறதெனில் சிவசக்தி வழிபாட்டின் பழமையும் பரவியிருந்த தன்மையும் நன்கு புலனாகும்.

சிவத்தின் அருள் ஆற்றல் தான் "சக்தி". இவ்வுண்மையை சாத்திரநூலான சிவஞான சித்தியார் 'அருளது சக்தியாகும் அரன் தனக்கு...' என்கிறது. மகாகவி சுப்பிரமணிய பாரதியார்,

'துன்பமிலாத நிலையே சக்தி
தூக்கமிலாக் கண்விழிப்பே சக்தி
அன்புகனிந்த கனிவே சக்தி
ஆண்மை நிறைந்த நிறைவே சக்தி
இன்ப முதிர்ந்த முதிர்வே சக்தி
எண்ணத்திருக்கும் திரியே சக்தி
முன்பு நிற்கின்ற தொழிலே சக்தி
முத்தி நிலையின் முடிவே சக்தி'

என்கிருர். சூரியனும் அதன் ஒளிக்கதிரும் வேறு வேறு போல் தோன்றினாலும் உண்மையில் இரண்டும் ஒன்றே! இதுபோல் தான் சிவமும் சக்தியும். இறைவன் இன்ன தன்மையன் என்று அளவிட சிற்றறிவுக்கு எட்டாத நிலையில் எங்கும் நீக்கமற நிலைத்திருக்கும் பாங்கில் அவனைப் பரமசிவம் என்றும் அவனது அருளாற்றல் பராசக்தி என்றும் கூறப்படும். சிவனை ஆணுகவும் அவனது அருளைப் பெண்ணுகவும் கொண்டு வழிபடுதல் சைவமரபு.

## நவராத்திர வழிபாடு

இறைவனின் அருள் அவனது சக்திவழியே நம்மைடைகிறது. உலகில் எங்கும் சக்தி எதிலும் சக்தி. உலகப்பொருள்களும் சக்தியின் வடிவங்கள். சக்தி வழிபாடே தாய் வழிபாடு, அன்னை வழிபாடு, அம்பிகை வழிபாடு என்றெல்லாம் கூறப்படும். நமக்கு முக்கியமாக வேண்டப்படும் வெற்றி, செல்வம், கல்வி என்பன மலைகள், அலைமகள், கலைமகள் என்னும் இறைவனின் சக்திகளாகிய அன்றையார் மூலம் வருவதாக ஆன்ருேர் கொண்டனர். இத்தகைய முப்பெருந்தேவியரை வழிபடுவதே நவராத்திரி வழிபாடு ஆகும். சிவனுக்கு உகந்தது சிவராத்திரி. இது ஒருநாள் இரவு மட்டும் கொண்டாடப்பட்டுவருகிறது. ஆனால் சக்திக்கு உரியது நவராத்திரி. இது ஒன்பது நாள் இரவு கொண்டாடப்படும்.

முப்பெருந்தேவியரின் இன்னருளைப் பெறுவதற்கு எல்லா நாட்களும் எல்லாக் காலங்களும் உகந்தவைதான் என்ருலும் புரட்டாசி மாதத்தில் வளர்பிறை தொடக்க நாள் முதல் ஒன்பது நாள்களும் (பிரதமை முதல் நவமி வரையும்) தேவிக்கு உரிய காலமாகும். எனவே இந்த நாட்களே நவராத்திரி தினங்களாகும். இந்த நாட்களில் முதல் மூன்று நாட்ளை வெற்றி தரும் பார்வதியாகிய மலைமகளுக்கும், இடையிலுள்ள மூன்று நாட்கள் செல்வம் வழங்கும் லட்சுமியாகிய அலமகளுக்கும், கடைசி மூன்று நாட்கள் கல்வி வழங்கும் கலைமகளாகிய சரசுவதிக்கும் உரியதாகக் கொண்டாடப்பட்டு வருகிறது.

## மலைமகள்

உலகெலாம் நிறைந்து நின்று இயக்கும் சக்தியே அன்னை. அவ்வன்னையே சிவசக்தி. சிவன் நிலையானது. சக்தி இயங்குவது. இயக்குவது சிவன். இடப்பாகத்தை அன்னைக்கு அளித்தான். சக்தியை உமாதேவியாக, பராசக்தியாக, பாரவதியாக வழிபடுகின்றனர். இத்தகைய சக்தி வழிபாடு அம்பிகை வழிபாடாக கிராமங்களிலும் நகரங்களிலும் கொண்டாடப்பட்டு வருகின்றது. கிராமதேவதைகளாக மாரியம்மன், காளியம்மன் எனப் பல்வேறு பெயர்களில் பல்வேறு வடிவங்களில் வழிபாடு நடந்துவருகின்றன. சக்தியின் அம்சங்களுள் துர்க்கையின் அம்சம் மிகவும் முக்கியமானதாகும். நமக்கு வெற்றியைத் தருபவள் பராசக்தி.

மாதா பராசக்தி வையமெல்லாம்
நீ நிறைந்தாய்
ஆதாரம் உன்னையல்லால்
ஆரெமக்குப் பாரினிலே
ஏதாயினும் வழிநீ சொல்லாய்
எமதுயிரே!
வேதாவின் தாயே! மிகப்பணிந்து
வாழ்வோமே!
-பாரதியார்

சக்தியின் அம்சங்களுள் துர்க்கையின் அம்சம் மிகவும் முக்கியமானதாகும். நவராத்திரியின் முதல் மூன்று நாட்கள் துர்க்கை அலங்காரம் செய்து வழிபாடு நடைபெறும். பராசக்தியாக, துர்க்கையாக, மகிடாசுரமர்த்தினி அம்சமாக அவள் சிம்மவாகனத்தில் வீற்றிருந்து பக்தர்களுக்கு வெற்றி தந்து அருள் பாலிக்கின்றாள்.

## அலைமகள்

விஷ்ணுவின் தேவி இலக்குமி. இவள் செல்வத்திற்கு அதிபதி. தேவர்களுக்காக அமிர்தத்தை வேண்டிப் பாற்கடலைக் கடைந்த பொழுது இவள் அக்கடலிலிருந்து வெளிப்பட்டாள். இவளை விஷ்ணு தம் மனைவியாகக் கொண்டார். இலட்சுமிக்கு விஷ்ணு தம் வலது மார்பில் இடம் அளித்தார். திருமகள் நமக்குச் செல்வத்தை வாரி வழங்கும் தேவி.

ஆடுகளும் மாடுகளும்
அழகுடைய பரிமா
வீடுகளும் நெடுநிலமும்
விரைவினிலே தருவாய்
ஈடுநினக்கோர் தெய்வமுண்டோ?
வாடுநிலத்தைக் கண்டிரங்கா
மழையினைப்போல் உள்ளமுண்டோ?
நாடு மணிச்செல்வமெல்லாம்
நன்கருள்வாய் திருவே!
பீடுடைய வான்பொருளே
பெருங்களியே திருவே!
-பாரதியார்

நவராத்திரி இடையில் உள்ள மூன்று நாட்கள் செல்வத்திற்கு அதிபதியாகிய திருமகள் விழாவாக கொண்டாடப்பட்டு வருகிறது.

## கலைமகள்

ஆயகலைகள் அறுபத்து
நான்கினையும்
ஏயஉணர்விக்கும் என்னம்மைதூய
உருப்பளிங்குபோல்வாள் என்
உள்ளத்தினுள்ளே
இருப்பாளிங்கு வாராதிடர்.

என்பதற்கிணங்க நமக்கு கல்விச் செல்வத்தை வாரிவழங்குபவள் கலைமகள் சரசுவதி. பிரம்மனின் துணைவி. வெள்ளை நிறத்தவள். வெள்ளை துகிலுடுத்தி வெண்டாமரை மேல் வீற்றிருப்பவள். இவளைச் சுற்றிலும் பூசிக்கும் முனிவர்கள் இருப்பார்கள். எல்லாச் சமயத்தவரும் இவளை வழிபடுவர். இதன் காரணம் இவள் வித்தைக்கு மூலகாரணம் என்பதாகும். இவளது தனியான சின்னங்கள் அட்சமாலை, புத்தகம், வீணை ஆகியவை.

வெள்ளைத் தாமரைப்பூவில் இருப்பாள்
வீணை செய்யும் ஒலியில் இருப்பாள்
கொள்ளையின்பம் குலவு கவிதை
கூறுபாவலர் உள்ளத் திருப்பாள்
உள்ளதாம் பொருள்தேடியுணர்ந்தே
ஓதும் வேதத்தின் உள்-
நின்றொளிர்வாள்
கள்ளமற்ற முனிவர்கள் கூறும்
கருணை வாசகத்துட்பொருளாவாள்
-பாரதியார்

நவராத்திரி விழாவின் கடைசி மூன்று நாட்கள் கலைமகளாகிய சரசுவதிக்கு உரிய விழாவாக கொண்டாடப்பட்டுவருகிறது.

## வழிபாட்டு முறை

நவராத்திரி நாட்களில் வீடுகளிலும், ஆலயங்களிலும் அம்பிகையை பல்வேறு விதங்களில் அலங்கரித்து மகிழ்வர். நவராத்திரி கொலுவைத்தல் சிறப்பு அம்சமாகும். தேவர், முனிவர், மக்கள் ஏனைய உயிர் வகைகளின் பொம்மைகள் புடைசூழ கலைத்திறன் மிளிர கொலு நிறுத்துவர். இதன் உட்பொருள் தேவி அண்டங்களையெல்லாம் படைத்துக் காத்து வருபவள் என்பதை நினைவு கொள்வதற்கேயாகும். ஆடல், பாடல் நிகழ்த்தி விழாவில் பங்கு கொள்வோருக்கு சுண்டல், பொங்கல், பழம் முதலிய நைவேத்தியப் பொருட்களை வழங்கி மகிழ்வார்கள். நாள்தோறும் அம்பாளைப் பூசிப்பதுடன் ஒவ்வொரு நாளிலும் 10 வயது முதல் 12 வரையுள்ள சிறுமிகளை தேவியின் அம்சமாக பாவித்து பூசித்து இயன்றவரை உணவு, உடை

கொடுத்து வரவேண்டுமென தேவி பாகவதம் முதலிய நூல்கள கூறும். அமாவாசையன்று ஒரு வேளை உணவுடன் உபாவாசமிருந்து அடுத்த ஒன்பது நாட்களிலும் பால், பழம் முதலியன உண்டு மூன்று வேளையும் வழிபட்டு வரவேண்டும்.

ஒன்பதாம் நாளில் தாம் பயன்படுத்தும் தொழில் ஆயுதங்களை தேவிக்கு அர்ப்பணித்து கொலுவில் வைத்துப் பூசை செய்து அந்தத் தொழிற்கருவிகள் மூலம் தம் தொழில் வெற்றியும் செல்வமும் கலையம்சமும் பெருக வேண்டுமென வேண்டுவர். ஆயுதங்களை வைத்துப் பூஜை புரிவதால் அவ்வழிபாட்டுக்கு ஆயுதபூஜை என்றும் பெயர்உண்டு.

### விரதபலன்

நவராத்திரி வழிபாட்டை பக்தி பூர்வமாகப் பண்ணுபவர்கள் புத்துணர்ச்சிபெற்று சக்தியின் அருளைப் பெறுவார்கள். அம்பாளின் அருளால் இகபர இன்பங்களை அடைவார்கள். முப்பெருந்தேவியரை வழிபட்டால் எல்லாச் செல்வங்களும் பெற்று வாழ்வில் பயன் பெறலாம்.

### முடிவு

தனந்தரும் கல்வி தரும் ஒருநாளும்
தளர்வறியா
மனந்தரும் தெய்வவடிவும் தரும்
நெஞ்சில் வஞ்சமிலா
இனந்தரும் நல்லன எல்லாம் தரும்
அன்பர் என்பவர்க்கே
கனத்தரும் பூங்குழாள் அபிராமி
கடைக்கண்களே

நவராத்திரி நாயகியர்களாகிய மலைமகள், அலைமகள், கலைமகள் என்றும் முப்பெருந்தேவியரை வணங்கி வழிபாடு செய்து வாழ்வில் வளம்பல பெறுவோமாக.

நாயகி நான்முகிநாராயணி கை
நளின பஞ்ச
சாயகி சாம்பவி சங்கரி சாமளை
சாதி நச்சு
வாய் அகிமாலினி வாராகிசூலினி
மாதங்கியென்று
ஆயகியாதியுடையாள் சரணம்
அரண் நமக்கே.

-அபிராமி அந்தாதி



## பதினொரு திருப்பதிகள்

சோழ நாட்டில் உள்ள திவ்ய தேஸங்களில் திருநாங்கூர் பதினோரு திருப்பதிகளுக்கு ஏற்றம் உண்டு. இங்கு பகவான் அர்ச்சை வடிவில் காட்சி தருகிறார்.

"நந்தாதீப கடப்ரணர்த்தக மஹாகாருண்ய ரக்தாக்ஷக
ஸ்ரீநாராயண புருஷோத்தமயுத ஸ்ரீரத்ந கூடாதிபாந் ।
வைகுண்டேஸ்வர மாதவௌ ச கமலா நாதம் ச கோபீபதிம்
நௌம்யேகாதச நாங்க புர்யதிப தீந் ஸார்த்தம்
கவித்வம் ஸிநா ॥

ஸ்லோகத்தில் கண்டுள்ளபடி 1) ஸ்ரீநந்தா விளக்குப் பெருமாள் 2) ஸ்ரீகுடமாகு கூத்தர் 3) ஸ்ரீபேரருளாளன் 4) ஸ்ரீதிருச் செங்கண்மால் 5) ஸ்ரீநாராயணன் 6) ஸ்ரீபுருஷோத்தமன் 7) ஸ்ரீமணிக்கூடநாயகன் 8) ஸ்ரீவைகுந்தநாதன் 9) ஸ்ரீமாதவன் 10) ஸ்ரீதாமரையாள்கேள்வன் 11) ஸ்ரீகோபாலகிருஷ்ணன் என்கிற ஏகாதச ரூபத்தில் ஸேவை ஸாதிக்கிறார்.

தகவல்: 'மிருதங்கம்' N.C. கோபாலன் - சென்னை.

## பொன் மொழிகள்

காந்த ஊசி எப்போதும் வடக்குத் திசையையே காட்டுவதால் கப்பல்கள் கடலில் திசை தப்பிப் போவதில்லை. அதுபோலவே மனிதனுடைய மனம் இறைவனையே நாடியிருக்கும் வரை அவன் வாழ்க்கைக் கடலில் திசை தப்புவதில்லை.

--இராமகிருஷ்ண பரமஹம்சர்

மலர்களிலே மணம் இருப்பது போலவே ஆண்டவனும் உன்னிடமே இருக்கிறான். இதை அறியாமல் தன்னிடமுள்ள கஸ்தூரியை மான் புல்லில் தேடுவதுபோல் நீ ஏன் வெளியில் தேடுகிறாய்.

--கபீர்தாஸ்

இறைவனைத் தன்னுள் காணுதவனுக்கு இறைவன் இல்லவே இல்லை.

--பூடின்

தொகுத்தவர்: சு. பொன்னம்மாள் - முகலூர்.

(தொடர் கட்டுரை)

# பகவத் கீதை

உமைப்ரியன்

## பன்னிரண்டாம் அத்தியாயம்

## பக்தி யோகம்

### அர்ச்சுனன் கூறியது:

ஏவம் ஸததயுக்தா யே பக்தாஸ்-
த்வாம் பர்யுபாஸதே ।
யே சாப்ய க்ஷரமவ்யக்தம் தேஷாம்
கே யோகவித்தமா: ।। (1)

"இதுபோன்று எப்போதும் யோகத்தில் உறுதி உடையவர்களாய் உம்மைத் தொழுதிடும் பக்தர்கள் மற்றும் நிர்க்குண பிரம்மத்தை எண்ணி வணங்கிடும் பக்தர்கள் ஆகியவர்களில் யார் உம்மை நன்ருக அறிந்தவர்களாகக் கருதப்படுகிருர்கள்.

[இறைவனின் திருவுருவ வழிபாடு சிறந்ததா அல்லது உருவமற்ற அருவநிலையில் வைத்து வணங்கப்படுவது மேலானதா என்ற கேள்வியை இங்கு ஒரு பக்தன் நிலையில் இருந்து அர்ச்சுனன் கேட்கின்றான்.]

### பகவான் கூறியது:

மய்யா வேச்ய மனோ யே மாம்
நித்யயுக்தா உபாஸதே ।
ச்ரத்தயா பரயோபே தாஸ்தே மே
யுக்ததமா மதா: ।। (2)

"என்பால் மனதை ஒருமுகப் படுத்தி, யோகத்தில் நிலைத்த எண்ணமுடையவராய், அதிகமான ஈடுபாடு உடையவர்களாய யார் என்னை வணங்குகிருர்களோ, அவர்களே யோகத்தில் மேம்பட்டவர்களாக நான் கருதுகிறேன்."

[இந்தப் பாடலின் மூலம் ஒரு யோகியின் தகுதிகளை பகவான் விளக்கியருளுகிருர். இறைவன் தன்னை எல்லாமாக, எங்குமாக, எப்போதுமாக பரந்து விரிந்து அமைந்து இந்த அகிலம் யாவையும் ஆண்டு வருகின்ருர். அத்தகு பேராற்றல் கொண்ட அவர் மீது தங்கள் முழு மனதையும் செலுத்தி வணங்குவர்களே சிறந்த பக்தர்கள். அந்த நிலையில் அவர்களுக்குள்ளே விருப்பு, வெறுப்பு, மனமயக்கம் போன்றவை எழும்பா. தங்கள் உயிரையும், உடலையும் இறைவனுக்கு என்றே அர்ப்பணித்து, இடைவிடாது அவனையே தியானிக்கின்றனர். ஆகையால் அத்தகு பக்தர்களே சிறந்த யோகிகள் ஆவர்.]

யே த்வக்ஷரமநிர்தேச்யமவ்யக்தம்
பர்யுபாஸதே ।
யர்வத்ரகம சிந்த்யம் ச
கூடஸ்தமசலம் த்ருவம் ।। (3)

"சொல்லுக்கு அடங்காது, கண்ணுக்குத்தெரியாது, மனதுக்கு



எட்டாது, எங்கும் நிறைந்துள்ளதாய், சிறிதும் மாறாததாய், நகராததாய், நிலைப்பெற்றும், அழியாததும் ஆகிய பண்புகளை உடைய பிரம்மத்தை யார் ஒருவர் எந்த நிலையிலும் சீரான அறிவு கொண்டவர்களாய், ஐம்புலன்களையும் அடக்கியவர்களாய் நன்கு வணங்குகிறார்களோ, எல்லா உயிர்களிடத்தும் நலன் பாராட்டும் அவர்களே என்னை வந்து சேருகிறார்கள்."

[நிர்க்குணமாகிய அந்த உருவமற்ற பரம்பொருளான பிரம்மத்தின் பெருமை இச் செய்யுளில் விளக்கப்படுகிறது. இந்த பிரம்மத்தை இத்தகையது என்று வர்ணிக்க முடியாது. ஆகவே அது சொல்லைக் கடந்தது. ஒருபொருள் தோற்றம் மறைவு கொண்டு விளங்கிடும் போது பல்வேறு உருவமைதிகளைக் கொண்டு விளங்கலாம். அதாவது தோன்றும்போது கண்ணுக்குத் தெரிந்தும் மறையும் போது அது மறைந்தும் விடுகிறது. ஆனால் தோற்றமும், மறைவும் இல்லாது, அதனால் எந்தவிதமான உருவ வேறுபாட்டினையோ கொண்டு விளங்காது இருப்பது பிரம்மமாகும். பிரம்மம் இங்கு உள்ளது என்று அதனைச் சுட்டிக்காட்ட முடியாது. ஏனெனில் அது எங்கும் நிறைந்தும், மற்றைய யாவும் அதனுள் ஒடுங்கியும் உள்ளது. மனதில் கற்பனைக்கெட்டாத அளவு கொண்ட கடலையோ, நிலத்தையோ, மலையையோ பார்த்திடலாம். ஆனால், அந்த சிந்தனைக்கும், கற்பனைக்கும் அடங்காது பிரம்மம் விளங்குகிறது. மாறுபாடும், சலனமும், கொண்ட இந்த அகிலத்தை நிலையான இந்த பிரம்மம் தன்னுள் தாங்குகிறது. இந்த பிரம்மம் நகரும் தன்மையற்றது. அசையாது காணப்படும் ஆகாயமும்கூட உலகம் அழியும் தருணத்தில் தான் இருந்த இடத்திலேயே அழிகின்றது. இதற்கு நேர்மாறானது பிரம்மம். இதந்த பெருமைமிகு பிரம்மத்தை யாரால் வழிபடமுடியும்? முடியும்! யார் ஒருவர் விருப்பு - வெறுப்பு, இன்பம், துன்பம் போன்ற முரண்பட்ட மன உணர்வுகளைக் கடந்து எல்லாவற்றையும் எந்த நேரத்திலும் சமமான மனதுடன் காணுகின்றார்களோ, ஐம்புலன்களை அடக்கி, உடலையும், உள்ளத்தையும் யார் ஒருவர் தன் கட்டுப்பாட்டில் வைத்திருக்கிறார்களோ, எல்லா உயிர்களிடத்தும் இறைவனைக் கண்டு அன்பும், நன்மையும் புரிகிறார்களோ அவர்களால் அந்த பரபிரம்மத்தை வழிபடும் தகுதி பெறுகிறார்கள்.]

க்லேசோ அதிகதரஸ் தேஷாமவ்-
யக்தாஸக்த சேதஸாம் ।
அவ்யக்தா ஹி கதிர்து: கம்
தேஹவத்பிர வாப்யதே ।। (5)

"நிர்க்குண பிரம்மத்தை வழிபடுவர்களுக்கு அதிக பயிற்சி தேவை. ஏனென்றால், உடல் உணர்ச்சிகளுக்கு உட்பட்டவர்களுக்கு பரபிரம்மத்தின் மீது நாட்டம் கொள்வது என்பது அரிதான ஒரு முயற்சியாகும்"

[வழிபாடும் முறைகள் பலவாக அமையலாம். அடைய வேண்டிய குறிக்கோள் இறைவனை உணர்வதாகும். அக்குறிக்கோளை அடைய உள்ளம் சலனமற்றும், உடல தூய்மை கொண்டும் இருத்தல் அவசியம். உருவமற்ற நிர்க்குண பிரம்மத்தை வழிபடுவதற்கு, துவக்கத்திலேயே மனிதன் பற்றற்று திகழ்தல் வேண்டும். நாளும் பிரச்சனைகளால் சூழப்பெற்றுள்ள மனிதனுக்கு உருவமற்ற இறைவனை தியானத்தில் என்பது நடைமுறையில் வெற்றிபெற முடியாத முயற்சியாகும். மனத்தை ஒரு நிலைப்படுத்த, பார்வை சிதறுமல் இருக்க கண்முன் சலனமற்ற கடவுளின் ஓர் உருவம் தேவை. இந்த சகுண பிரம்ம உபாசனையே மனிதனை சிறுக சிறுக ஆன்மீகச் சிந்தனையில் ஈடுபடச்செய்யும் ஆற்றல் பெறுகிறது.]

யே து ஸர்வாணி கர்மாணி மயி
ஸம்ன்யஸ்ய மத்பரா: ।
அனன் யேனைவ யோகேன மாம்
த்யாயந்த உபாஸதே ।। (6)

தேஷாமஹம் ஸமுத்தர்தா
ம்ருத்யுஸம்ஸாரஸாகராத் ।
பவாமி நசிராத்பார்த்த மய்யா
வேசித சேதஸாம் ।। (7)

"ஆனால் யார் ஒருவன் தான் புரியும் வினைகள் யாவற்றையும் எனக்கே அர்ப்பணித்து விடுகின்றானோ, யார் என்னை இறுதிப்புகலிடமாக சரணம் அடைகின்றானோ, யார் ஒருவன் எந்தவிதத் தடங்கலுமற்ற யோகத்தால் என்னையே தியானித்து வழிபடுகின்றானோ, யார் ஒருவன் என் மீது மட்டும் தன் சிந்தனையை செலுத்துகின்றானோ அவனை (அவர்களை) நான் இறப்பு எனும் பிறவி பெருங்கடலிலிருந்து உடனடியாக கரையேற்றிக் காப்பாற்றுவேன"

[இங்கு மனிதன் எந்திவிதப் பற்றுமின்றி, உலாகாயுத ஆசைகளை மறந்து, மனதையும், உடலையும் இறை நினைப்புடனேயே செயல்படுத்துகின்

ரூனோ, அவனை இறைவனே தானே முன்வந்து காப்பாற்றுவதாக பகவான் தன் பக்தனுக்கு நம்பிககையும், உறுதியும் இப்பாடல்மூலம் அளிக்கின்ருர்.]

மய்யேவ மன ஆதத்ஸ்வ மயி
புத்திம் நிவேசய ।
நிவஸிஷ்யஸி மய்யேவ ஆத
ஊர்த்வம் ந ஸம்சய: ।। (8)

"மனதை என்னிடமே ஈடுபடுத்தி, அறிவை என்மீதே செலுத்துவாயாக. பிறகு (நீ) என்னிடமேயே இருப்பாய் என்பதில் சிறிதும் ஐயமில்லை."

[மனிதனை உயர்த்துவதும் - தாழ்த்துவதும், அவனுக்கு செழிப்பையும் - அழிவையும் தருவது அவன் மனமும் அறிவுமேயாகும். மனம் வினாடிக்குக் கொருமுறை மாறிக்கொண்டே இருக்கும். அந்த மனிதனின் எண்ண அலைகளுக்கேற்ப அறிவானது செயல்படுகிறது. ஆகவே மனதைக கட்டுப்படுத்துவதும், அறிவை ஆக்கப்பூர்வமாகச் செயல்படுத்துவதும் மிகவும் முக்யமாகும். இந்த இரு முயற்சிகளில் மனிதன் வெற்றி பெற்றுவிட்டால், 'இறை தரிசனம்' அவனை நாடி வரும என்பது உறுதி.]

அதசித்தம் ஸமாதாதும் ந சக்னோஷி
மயிஸ்திரம் ।
அப்யாஸ யோகேன ததோ
மாமிச்சாப்தும் தனஞ்ஜய ।। (9)

"தனஞ்சயனே! (உன்னால்), இதுபோன்று அறிவை என்மீது உறுதியாக பதிக்க வைக்க முடியாவிட்டால், 'பயிற்சி' எனும் யோகத்தால் என்னைச் சேர முயல்வாயாக."

[மனமானது எவ்வளவுக்கெவ்வளவு நல்லதை எண்ணுகின்றதோ, அதற்கு நேர்மாருக தீயவற்றையும் எண்ணிபபார்க்கும். அதனால் மனதை தூயமையாக வைக்க வேண்டுமென்ருல் அவன் நல்லவற்றையே நோக்கும், எதிர்பார்க்கும் சூழ்நிலையில் அதனை நிறுத்தி வைக்க வேண்டும். ஆகவே மனதை நல்ல திசையில் திருப்ப வேண்டுமென்ருல் தகுந்த மனப் பயிற்சியினால் மட்டுமே இது சாத்தியமாகும்.]

அப்யாஸே அப்யஸமர்த்தோஅஸி
மத்கர்மபரமோ பவ ।
மதர்த்தமபி கர்மாணி குர்வன்
ஸித்திமவாப்ஸ்யஸி ।। (10)

"பயிற்சி மேற்கொள்வதில் உனக்கு ஆற்றல் இல்லையாயின் என்பொருட்டு (எனக்காக) வினை மேற்கொள்வதை ஒரு இலட்சியமாகக் கொள்வாயாக! என் பொருட்டு தீவினைகளை (செயல்களை) மேற்கொள்வதாலும் நீ என்னைச் சேரமுடியும்."

[மனிதனை மேம்படுத்துவதற்காக, அதற்காக அவனை உற்சாகப்படுத்துவதற்காக, அவனுள் நம்பிக்கை ஊட்டுவதற்காக இறைவன் தன் நிலையைவிட்டு, மனிதனின் அடித்தள நிலைக்கு இரங்கி வந்து பலவாறு பல எளிமையான வழிமுறைகளை உபதேசிக்கின்ருன். இது இறைவனின் கருணைத் திறத்தினை நமக்கு தெரிவிக்கின்றது. தீய காரியங்களை செய்வதிலேயே, எண்ணுவதிலேயே மனிதன் பழக்கப்பட்டுவிட்டதால், நல்ல சூழ்நிலைக்குத் தன்னை வசப்படுத்திக் கொள்வதற்காக பயிற்சியை மேற்கொள்வதில் அவன் தளர்ச்சி அடையக்கூடும். ஆகவே அவனை உற்சாகப்படுத்துவதற்காக 'எல்லாம பகவனுக்காக' 'அவன் ஆட்டுவிக்கின்ருன் நான் ஆடுகின்றேன்' என்ற மன நிலையில் தன்னை ஒரு கருவியாகக் கொண்ட நிலையில் தன் வினைகளை மேற்கொள்ளுதல வேண்டும். இதனால், தான் செய்யும் தீய காரியங்களும் சிறுகச சிறுக மறைந்து சீரிய சிந்தனையுடன் அறிவு விளங்கிட வழிபிறக்கும்.]

(தொடரும்)

## ஸ்ரீ ராம கிருஷ்ணரின் பதில்

'பன்றியோடு சேர்ந்த கன்றும் கெட்டுப்போகும் என்கிருர்களே ஏன்? கன்றேடு சேர்ந்த பன்றி திருந்த வாய்ப்பில்லையா?' என்று ராமகிருஷ்ண பரமஹம்சரை ஒருவர் கேட்டார். அதற்குப் பகவான் ராமகிருஷ்ணர் பாலோடு சாக்கடைநீர் சேர்ந்தால் பால்தான் கெடும். இரண்டில் எது எதோடு சேர்ந்தாலும் தீயவைதான் நல்லவையை ஆட்கொள்ளும். இனிய புல்லாங்குழல் ஓசையை மரணச் சங்குவென்றுவிடும். ஒரு குடம் பாலை ஒரு துளி விஷம் கெடுத்துவிடும். ஒரு அறிஞனின் அறிவுரையை ஒரு முட்டாளின் கூச்சல் நாலுபேர் அறியாமல் செய்துவிடும் என்ருர் அமைதியாக. அப்படியானால் தீமையை நன்மையினால் வெல்வது எப்படி? என்ருர் கேள்விகேட்டவர். ஒருநாய் உன்னைப் பார்த்துக் குரைக்கும் போது கல்லை எறிந்தால் மேலும் மேலும் குறைக்கும். அதற்கு ஒரு ரொட்டித் துண்டைப்போடு. உன்னைப் பார்த்து வாலாட்டும். இதுவே தீமையை வெல்லும் தந்திரமாகும் என்ருர் ஸ்ரீராமகிருஷ்ணர்.

**தொகுத்தவர்: சு. பொன்னம்மாள் - முகலூர்.**



# திருவேங்கடத்தந்தாதி

திரு. லா. ஸ்ரீநிவாஸன் - புதுதில்லி.



திவ்ய கவி பிள்ளைப்பெருமாள ஐயங்கார் இயற்றியுள்ள அஷ்டப்ரபநதங்கள் ப்ரஸித்தமானவை. திருவேங்கடமுடையானைப் பற்றிய திருவேங கடததநதாதியும் திருவேங்கடமாலையும் அஷ்ட ப்ரபந்தங்களுள் அடஙகியவை. இவ்விரணடு சிறந்த நூல்களையும் இவர் இயற்ற நேரிட்டதைப் பற்றி ஒரு சாரார் இங்ஙனே ஒரு வரலாறு வழுங்குவதுண்டு.

இவர் ஸ்ரீரஙகநாதனுககே தொண்டராகி, அப்பெருமானையன்றி வேறு எநத தெய்வத்தையும் மறந்தும் தொழாத மனவுறுதியுடையவராய், அரங்கன் விஷயமாகவே ப்ரபந்தங்களை அருளிச்செய்தார். இதைக் கண்ட திருவேங்கடமுடையான் இவர் வாயால தாமும் ப்ரபந்தம் பாடப்பெறவிரும்பித் தமது உண்மை வடிவுடன் இவருடைய கனவில் தோன்றி 'வேங்கடத்தின் விஷயமாகச் சில ப்ரபந்தங்கள் பாடுக' என்று கட்டளையிட்டான். அதற்கு அவர் இணங்காமல் 'அரங்கனைப்பாடிய வாயால் குரங்கனை (குரங்குகளுடன் மலையில் வாழும் திருவேங்கடவனை)ப் பாடேன்' என்று மறுத்தார். எங்ஙனமாவது இவர் வாயால் பாடல் பெற ஆவல்கொண்டான் திருவேங்கடமுடையான். மேலும் எல்லாத் திருப்பதிகளிலும் எழுந்தருளியிருக்கிற எம்பெருமான் ஒருவனே என்பதையும இவருக்கு உணர்த்த விரும்பினான். எனவே இவர்க்கு உடனே கண்டமாலை என்னும் கொடிய நோய் உண்டாகும்படிச் செய்தான். அந்த வியாதியினால் வருந்திய ஐயங்கார் அதன் காரணத்தை உணர்ந்து, திருவேங்கடமுடையானிடம் தாம் பட்ட அபசாரம் தீரும்படி உடனே திருவேங்கடமாலை, திருவேங்கடத்தந்தாதி என்ற இரண்டு ப்ரபந்தங்களை

யும் இயற்றி அப்பெருமானைத் துதித்தார். அதனால் திருவுள்ள முகுந்த திருவேங்கடமுடையான் இவர் முன் எழுந்தருளிக்காட்சி தந்து அநுகரஹித்தான். அதனால் இவருடைய நோயும் உடனே நீங்கிற்று.

திருவேங்கடமுடையான் ஐயங்காருக்கு ஸேவை ஸாதித்த இடம் திருமலைக்கோயிலில் சலவைக் கல மண்டபப் பிராகாரம் என்கிற உட்பிராகாரத்தில் தென்கிழக்குப் பக்கத்தில் என்பர்.

இக்கட்டுரை பிள்ளைப்பெருமாள் ஐயங்கார் திருமலைப்பனின் விஷயமாக அருளிய திருவேங்கடத்தந்தாதியைச் சுருக்கமாக அநுபவிக்க விழைகிறது. பாசுரங்களின் ஸாரம் மட்டும் கொடுக்கப்படுகிறது. விரிவுக் கஞ்சி இங்ஙனே செய்யவேண்டியது அவச்யமாகிறது என்க.

முதன்முதலில் சிறப்புப் பாயிரத்தால் இந்நூலைப்படிப்பவர்கள் பிறவித்துயரை ஒழித்து, ப்ரக்ருதி ஸம்பந்தமற்று, விரஜா நதியில் நீராடி பரம பதம் சேர்வர் என்று பயன் கூறுகிறுர்.

அடுத்தபடியாக காப்புப் பாயிரத்தின் மூலம், சொற்குற்றம் பொருட்குற்றமின்றிக் கவிபாடுமாறு தமக்கு நல்ல கவன சக்தியை அருளும்படி நம்மாழ்வாரை வேண்டிக்கொள்கிறுர்.

இனி நாம் நூலின் பாசுரங்களின் ஸாரத்தை சுருக்கமாகக் காண்போமாக.

(1) ஒரு விலங்கினால் (முதலையினால்) மற்றொரு விலங்குக்கு (ஸ்ரீகஜேந்திராழ்வானுக்கு) நேர்ந்த துன்பத்தை எம்பெருமான் தனது ஸ்ரீவைகுண்டத்திலிருந்து கொண்டே ஸங்கல்ப மாத்ரத்தினால் தீர்க்காமல் அரைகுலையத் தலைகுலைய மடுக்கரைக்கே வந்து உதவினான. அவனே நமது ஆபத்துக்களையும் போக்க திருவேங்கடமலையில நிலையாக நிற்கின்றுன்.

(2) பிரமன் முதலிய தேவர்களும் முனிவர்களும் காலையிலும் மாலையிலும திருமாலை மனதில் த்யானிக்கின்றனர. அவன எப்படிப் பட்டவனென்றுல் திருப்பாறகடலை ஒரு சமயம் கடைநதவன், மேலும் திருமலையில எப்போதும் வாசம் செயபவன்.

(3) சரீரத்தைத் திருக்கோயிலாக அமைத்து, சிறந்த அறிவாகிய அவியாத் திருவிளக்கை அதில் ஏற்றி, திருமலையப்பனை மனமாகிய கர்ப்பக்ருஹத்தில் எழுந்தருளப்பண்ணி, அவன் திருவடிகளில் பாமாலையாகிய பூமாலையைத் தொடுத்துச் சாத்தினோம். இதைவிட இந்திர பதவியும் சிறந்ததோ? அன்று.

(4) வேதங்களால் கூறப்பட்ட எல்லா பொருட்களுக்கும் ஆனந்தங்களுக்கும் உற்பத்தி காரணனும், நல்லதாயும் தந்தையும், திருமகள் நாதனும், எல்லாத் தெய்வங்களுக்கும் முதன்மையானவனும் சோலை சூழ்ந்த திருவேங்கடமலையில் எழுந்தருளியிருக்கும் திருமாலே ஆகும்.

(5) மாயையையுடையவனும் க்ருஷ்ணுவதாரம் செய்தவனும், நீலமணி போன்ற நிறமுடையவனும், உலகங்களையெல்லாம் அளந்தவனும், இராவணன் தலைகளைத் துண்டித்தவனும் திருவேங்கடத்தில் உறையும் பரிசுத்தமூர்த்தியே. இவனுடைய பக்தர்களுக்கு வைகுந்தம் அருகேயாம்.

(6) திருவேங்கடமுடையான் திருமண்காப்பை தரிக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு அருள்பவன. அவனது குளிர்ந்த செந்தாமரை போன்று பொலிவு பெற்ற திருவடிகள் என் உயிரை, பழுக்கக் காய்ச்சின இரும்பு நீரை உட்கொள்வது போல் பருகிவிட்டன. எனவே, நோய்காள்! தூரததில் போய் பிழையுங்கள்.

(7) சுக்ரீவனுக்கு மகுடாபிஷேகம் செய்தவனே! சிறியவனான அடியேன் மனத்தில் உறைந்து வேண்டிய வரங்கள் அருள்பவனே! மேகங்கள் சோலைகளின்மேல் தவழும் திருவேஙகடமலையில் எழுந்தருளியிருப்பவனே! எனது அந்திம தசையில் 'அஞ்சேல' என்றருளி எனக்கு நற்கதியளிக்கவேண்டும்.

(8) முருகன், முனிவர்கள் முதலியவர்களின் ப்ரார்த்தனைப் படி அவர்களுக்கு ப்ரத்யக்ஷமாகத் தோன்றினாய். கவந்தனைக் கொன்றுய். திருவேங்கடவா! எனதுயிர் உனக்குரித்தான பின்பும் பஞ்சேந்திரியங்களுடன் கூடிய ஆசை என்னைத் தாக்குகிறதே! இது என்ன அநீதி!

(9) திருப்பாற்கடலிலும், ஆலிலையிலும், திருவனந்தபுரத்திலும், திருவரங்கத்திலும் பள்ளிகொண்டு யோக நித்திரை செய்யும் திருவேங்கடவா! உன்னைப் பிரிந்த என் மகள் அன்றிலின் குரலைக் கேட்டு வருந்துகிறுள். அவள் பிரிவைப் போக்கடித்து உன்னுடன் சேர்த்துக் கொள்வாயாக. (ஐயங்கார் தம்மைத் தலைவியின் தாயாக பாவித்துப் பேசும் பாசுரம் இது).

(10) கடலே! ஸ்ரீபூமிஸமேதனும், உதய சூரியன் போல்

ஒளிவீசும் கிரீடம் தரித்த வனும், கரிய திருமேனியுடையவனும், மாதவன் கண்ணன என்ற திருநாமங்களையுடையவனும், திருவேங்கடமலையில வாழ்பவனுமான திருமால் உனனிடம் நித்திரை செய்ய நீ என்னை அரிய தவம் செய்தாய்?

(11) கருங்கடலில் செந்தாமரைகள் பூத்தாற்போன்ற திருமேனி அவயங்களையுடையவனும், பரமபதநாதனும் பீதாம்பரம் தரித்தவனும் திருவேங்கடத்திலுறைபவனுமான திருமாலைத்துதியாத, ஐம்புலன்களை அடக்காத கீழ்மக்களுடன் நெஞ்சே! நீ சேராதே.

(12) முருக்கை மலர் போன்றவாயும் கிளி கொஞ்சுவது போன்ற பேச்சையுமுடைய தோழிகாள்! என் காதலனின் பிரிவால் இரவு ஐந்து யுகம் போல் நீண்டு என்னை வதைக்கிறது. எனவே என்னை நறுமணமுள்ள திருத்துழாய் மாலையணிந்த திருவேங்கடமுடையானிடமே சேர்த்து விடுங்கள் (ஐயங்கார் நாயகீ பாவமடைதல்)

(13) அறிவு ஒழுக்கங்களில் சிறியவர்களே! பிறவிப்பெருங் கடலினின்று யாவரையும் கரையேற்றிக் காக்கும் பொருட்டுத் திருவேங்கடமலையில் திருமால் நிலையாய் எழுந்தருளியிருக்க, தங்கள் பிறவிகளையே களைந்து கொள்ள முடியாத சிறு தெய்வங்களை நீங்கள் வழிபடுகிறீர்களே! ஆனையுமன்றோ 'ஆதிமூலமே!' என்று உண்மையை உணர்த்தியது.

(14) அஞ்சன கிரியாகிய திருவேங்கடத்தில் எழுந்தருளியுள்ளவனே! நாய்போன்ற நீசனான அடியேனை வெறுக்காமல் அங்கீகரித்தாய. இனி சிவன் முதலிய எந்த தேவர் என்முன் வலியத் தோன்றினாலும், என் தலை அவர்களை வணங்காது, என நா அவரகளைத் துதிக்காது.

(15) விபீஷணனை முடிசூட்டிய திருவேங்கடவா! உன்னைப் பிரிந்த என் பெண் உன்னையே தொழுகிறுள், துயரம் நீங்காமல் பெருமூச்சு விடுகிறுள், மோஹமடைகிறுள், உறங்குவதில்லை. எனக்கு இவள் ஒரே பெண். அருமையானவள். இவளை நீ ஏற்காவிடில் 'தயாளிந்து' என்ற பெயர் உனக்குத் தகுதியுடையதாகாது. (தாயின் ப்ரார்த்தனை)

(16) மதத்தையுடைய, மலை போன்ற குவலயாபீடம் என்ற யானையின் தந்தங்களை ஒடித்திட்டாய். கடலை வற்றுமாறு ஆகநேயாஸ்த்ரத்தை பரயோகித்தாய். உனககுத் திருப்பாற்கடலும், ஸ்ரீவைகுண்டமும் திருவேங்கடமலையும் போல என் நெஞ்சமே ஸ்திரமாக நிற்பதற்கும், இருப்பதற்கும், சயனிப்பதற்கும் ஒருங்கே உரிய இடமாகும்.

(17) சேதனர்களே! எம் பெருமான் பரமபதத்தில் எழுந்தருளியிருக்கும் இருப்பை பிரமன், சிவன் முதலிய தேவர்கள் கண்டறியும் திறமையற்றவர்கள். எனவே, உலகளந்தவனும், நந்தகோபனின் குமரனும், அடியவர்க்கெளியனுமான அவன் எழுந்தருளியுள்ள திருவேங்கடமலையையே சோம்பலின்றி வணங்குங்கள்.

(18) எல்லா உலகங்களுக்கும் ஆதாரமானவனே! வண்டுகள் பாடும் திருவேங்கடமலையின் ஸ்வாமீ! உனது பொலிவு பெற்ற திருவடித்தாமரையன்றி அடியேனுக்கு வேறு பற்றுக்கோடில்லை. பிரமன் அழியும்போது உடன் அழியும் அண்டங்களுக்கப்பாலுள்ள பரமபதத்தில் யான் சென்று சேருமாறு என்வினைகளைக் கழித்தருள வேண்டும்.

(19) வெண்ணிறமான சந்திரனே! இராமனாய அவதரித்த திருவேங்கடமுடையானை, என் மகளைப்போல நீயும் விரும்பினாயோ? அதனால்தான் உடல் வெளுத்து, மாசடைந்து பனிநிரம்பப் பெற்றுள்ளாய் போலும் (தலைவியின் தாயின் பேச்சு)

(20) ஆய்ச்சிகளின் தயிரைக் களவாடியவனும், இரணியன் மார்பைக கீண்டவனும், வடவேங்கடமுடையவனுமானவன் திருவடிகளில வணங்குங்கள். அதன் பயனாக திவ்ய தேஜோமயமான பரமபதம் அடையும்படி அவன் உங்களுக்குத் தாமதமின்றி அருள்வான்.

(21) இலங்கைக்கிறை இராவணனின் மந்தரமலை போன்ற இருபது தோள்களையும் பத்துத் தலைகளையும் அறுத்திட்ட திருவேங்கடவனுடைய திருநாபியில் பூத்த தாமரையிலிருந்து பிரமன் முதலான எண்ணிறந்த பிராணிவர்க்கங்களும் உலகங்களும் தோன்றின.

(22) வேதப்ரதிபாத்யனாய், ந்ருஸிம்ஹனாயவதரித்த திருவேங்கடமுடையானுக்கெதிரில் ஐம்பெரும் பூதங்களில் பூமிமுழுவதும் ஒரு தூசியாகும். ஜலம் முழுவதும் ஒரு நீர்த் துளியாகும். அக்னி முழுவதும் ஓர் அனற்பொறியாகும். காற்று முழுவதும் ஒரு சிறிய மூச்சாம், ஆகாசமும் விரல்களிடையே தோன்றும் சிறிய வெளியிடமாம்.

(23) உலகளந்தானே! ஆலிலைப் பள்ளிமாயனே! பூமிப் பிராட்டியின் நாயகனே! வடவேஙகடவா! அலரமேல் மங்கை உறைமார்பா! அடியேனைப் பிறப் பிறப்பிலலாமல் காததருள வேண்டும்.

(24) ஆதிசேஷனைச் சயனமாக உடையவனும், திருமலையானுமான திருமாலை கஜேந்திரன 'ஆதிமூலமே!' எனறழைக்க, அவன் கொடிய முதலையை சக்கரத்தால் கொன்ற சிறப்பைப் பார்த்திருந்தும், தங்களைக் கடவுளென்று சொல்லிக் கொண்டு திரியும் வேறு சில தேவர்களுக்கு வேறுபுகலில்லையே?

(25) உலகங்களைப் படைத்து, பிரளயததில அவற்றைத் தன் திருவயிற்றில் வைததுக் காப்பாற்றியவனும், க்ஷீராப்திசாயியும், உறவினரற்றவனும், பரமபத நாதனுமாகிய திருவேங்கடவனுக்கு நீங்கள் அடிமை செய்ய மேற்கொண்ட பின்பு, யமன் உங்கள் பெயரை நினைக்கவும் அஞ்சுவான்.

(26) தன்னை ஞானியாக அபிமானித்து ரிஷிகள நால்வருக்கு உபதேசித்த உமாபதியும், அவன் பிதாவான பிரமனும், சக்கரத்தண்ணலான திருவேஙகடமுடையானை அறியவல்லரல்லர். அவனை இபபோதே வணங்குஙகள். ஏனெனில் நீஙகள் இறககும்போது, யமன உங்கள் மேல் பாசத்தை வீசம்போது, வணஙகமுடியாது.

(27) உகரமூர்த்தியான விஷ்வக்ஸேனரையும் திருவேங்கடமுடையான் தனது திருமேனியில் ஒரு பாகத்தில் எற்றுக் கொண்டான். வஞ்சனையில் சிறந்த பூதனையின விஷத்தையும் அமுதம போல உண்டான். அஙஙனமே யானபாடும் செய்யுள்களில் குறறம பாராது தனது திருவருளால இனியனாவாகவே அஙகீகரிககட்டும.

(28) 'ஆண்யானை பெண யானையை அடைய வேகமாகச் செலலும்போது நடுவில் குழியில் விழுநது அகபபடடுககொள்கிறது ஸ்பரச வசததால். மீன சுவையின ஆசையால தூணடில் மாட்டிக்கொள்கிறது. அசுணம் என்ற பறவை இனிய சப்தத்தைக் கேட்கும்போது கொடிய பறை கொட்டுவதால மாள்கிறது. வண்டு நறுமணத்தை நுகர தாமரையிடம செலல, அது மூடிக்கொள்ள அகப்பட்டு வருந்துகிறது. விட்டில பூசசி விளக்கை அழகிய ரூபமென எண்ணி அதில் வீழ்ந்து அழிகிறது. இதுபோல் பஞ்சேந்திரியங்களின் வசத்தால் மாள்பவர்களே! திருவேங்கடமுடையானை வணங்கி உஜ்ஜீவியுங்கள்.

(29) திருவேஙகடததானே! முன்பு நீ மராமரங்களை எய்தாய், விச்வரூபமெடுத்தாய். ஆதிசேஷனாக பூமியைத் தாங்கினாய். உனது அடியார்களான முதலாழ்வார்களுக்குக் காட்சி கொடுக்கும பொருட்டு நீ திருககோவலூரில அவர்களிருநத இடததிற்கு நடநது சென்றது எவ்வாறோ?

(30) அலர்மேல மங்கை உறை மார்பா! இவன அழகிய பெண்களிடம் ஆசை கொண்டவன் என்று யமதூதர்கள் என்னைப் பிடிக்க வருவார்கள். அதற்காக அப்போதைககப்போதே உன்னைச் சரணமடைந்தேன். என்னைக் காப்பாற்ற வேண்டும்.

(31) ஆதிசேஷ பர்யங்கமுடையவனே! கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்தவனே! கஜேந்திராழ்வானைக் காத்தவனே! திருவேங்கடமுடையானே! ஆச்சர்யமான குணங்களையும் செயல்களையும் உடையவனே! தீவினையால் வருந்துவதறகா அடியேன் உனக்கும் பெரிய பிராட்டியாருக்கும் அடிமைபபட்டேன்?

(32) சிற்றின்பமளிக்கும் இளமடவார், அவர்களின் ஆடல் பாடல் முதலியற்றில் சேராமல், தேரின்மேல் வரும் சூரியன் தவழப்பெறற திருவேங்கடமலையில் நிறகும் கருணைசெய்கிற, ஞானமயமான, பரதத்வமாகிய திருமாலின் திருவடிகளைச சரணமடைநதேன்.

(33) பொய்யான புறச்சமய நூல்களைக் கற்று உண்மையறியாது உழல்பவர்களே! மோக்ஷ ஸாதனமான பரம்பொருள் இன்னதென்ற உண்மையை நான் உறுதியாகக் கூறுகிறேன், கேட்டு உய்வீர். ப்ரளயத்தில் உலகை விழுங்கிய திருவேங்கடவனே வீடு பேற்றுக்கு ஸாதனமான ஞானஸ்வரூபி என்று வேதங்கள் முறையிடுகின்றன.

(34) இலங்கையையழித்த சங்கமிடத்தானான வேங்கடவன் சரணமடைந்தபின்னும் என்னை ஆட்கொளளாவிடில், நான் எடுககக்கூடிய பிறவிகளின் எண்ண வானிலுள்ள நக்ஷத்திரக் கூட்டங்களும் போதாது.

(35) உண்டியே உடையே என்று அலைபவர்களே! இனி வரப்போகும் பிறவிகளை எங்ஙனே தடுப்பீர்கள்? கஜேந்திரனைக் காத்தருளிய திருவேங்கடமுடையான் திருவடிகளையே தரிசித்துச் சரணமடையுங்கள்.

(36) ஊழ்வினையின பயனான பிறவிகளை ஒழிகக விரும்புபவரகளே! காளமேகம் போன்ற திருமேனியையுடைய திருவேஙகடவனைத் த்யானியுங்கள். அவன் வேண்டிற்றெலலாம் தருவன். அவன திருவடியை பிரமன விளக்க, அந்த தீர்த்ததஹதைச சிவன தன் தலையில் ஏற்ருனனரே?

(37) லோக ச்ரஷ்டாவும் தகப்பனுமாகிய பிரமனின் தலையைக் கொய்த சாபத்தால எங்கும் பிச்சையெடுத்துச் சென்ற ஈசனின் கையிலொட்டிய கபாலத்தைத் திருவேஙகடமுடையானன்ரே போக்கடித்தான்? என்னையும் காப்பாற்றித தன திருவடியின் கீழ் வைத்தருளினான அந்த புண்ணியனே.

(38) மன்மதனின தநதையான வேஙகடவன் தன்னை வணங்கினவற்கு மோக்ஷத்தையே கொடுக்கவிரும்பினாலும், அவர்கள் விரும்பும் மற்ற புருஷார்த்தஙகளையும் அருள்கிருன்.

(39) ஆலிலையிலும் திருப்பாறகடலிலும் ஆதிசேஷன் மேலும் கண்வளர்ந்தவனும், நப்பின்னைவல்லபனாய் அத்புத சகதியுடையவனும் கண்ணனாய் அவதரித்தவனும் திருமலையில் உறைபவனே. பஞ்சேநதரியங்களின் வஞ்சனை ஒழிய அப்பெருமானின் பன்னிரு நாமங்களையே விடாது சொல்வேன்.

(40) சிரமப்பட்டு செல்வத்தைச் சேர்த்து அதைப் பெண்களிடம் சிலவு செய்பவர்களே! திருவேங்கடமலையானும் அர்ச்சுனனுக்குத் தேரூர்ந்து பார்த்தஸாரதி என்று ப்ரஸித்திபெற்றவனுமான கண்ணனையே சரணுக நினையுங்கள்.

(41) ஒப்பற்ற அருவிசோர் திருவேங்கடமலையானே! அடியேனை விடக் கருதியோ பஞ்சேநத்ரியங்களாய் படுத்துகிருய்? இனி உன்னை விட்டுத் தரிககும்படி எங்ஙனே? உன்னையனறி உய்யும் வகை ஏது?

(42) கௌசலையின் அரும்புதல்வனாயவதரித்த வேங்கடவா! கரிபொன்னை ஒத்தாலும், கரிகண்டனான சிவன் முதலிய தேவர்கள் உன்னை ஒவவார. கரியளித்த (கஜேந்திரனைக் காத்தருளிய) உனக்கு நீயே உபமானம், வேறு உவமை கிடையாது.

(43) பெண்களைக் கொண்டாடி அவர்களுக்கே தொண்டு படுவதால் யாதொரு இன்பமுமில்லை, துன்பமே உண்டு. பேரினபம பெறுவதற்கு இரணியனைக கிழித்துப்போட்ட திருவேங்கடவனையே பல்லாண்டு பாடித்திரியுங்கள்.

(44) பாணுசுரன் கண்ணபிரானுடன் போர் செய்தபோது, அவனுக்கு உதவியாகவந்த முருகன், துர்க்கை, அக்னீ ஆகியோர் தோறக, சிவனும் தான் உடம்பில் எப்போதும் பெண்ணையுடையவன் என்று சொல்லிக்கொண்டு ஓடினான். ஆக, திருவேங்கடவனே யாருக்கும் மேம்பட்டவன்.

(45) திருமகள் கேள்வா! திருவேங்கடவா! பசுக்களை மேய்த்தவனே! கலலைப் பெண்ணுக்கிய திருவடிகளையுடையவனே! உன்னுடைய அந்த அழகிய திருவடிகளையே அந்திமதசையில் எனக்குத் தந்தருளவேண்டும்.

(46) உன்னைக் கண்டு என் கண்களில் ஆனந்தக் கண்ணீர் பெருகவில்லை,எனது மனது உருக வில்லை, ஆயினும் புருஷகாரமான பிராட்டியுடன் திருமலையில் எழுந்தருளியிருக்கும் உன்னை நான் சரணமடைந்துள்ளேன். எனவே எனக்கு வைகுந்தம் கிடைக்காமல் போவது எங்ஙனேயோ?

(47) குருந்தமரமொசித்த திருவேங்கடநாதனே! ஸ்ரீவைகுண்டநாதனே! கூர்வேற்படை போன்ற கண்களையுடைய மாதரிடம் எனககு உண்டாகும் ஆசையை ஒழித்து, என் கர்மங்களைப்போக்கி, என்னை முக்தர்களிடம் ஒருவனாக ஆக்க வேண்டும்.

(48 திருவேங்கடமுடையான் பக்தர்களுக்கு தம்மையே ஒக்க அருள் செய்வர் என்று வேதம் ஓதுவதை நேராகக் கண்டோம். எங்ஙனேயெனில், என்னுடைய மகள் வேங்கடேசனை ஆதரித்து அவனைப்போலவே 'மாலாகிப் பள்ளிகொள்ளாமல் சங்கோடு அணி ஆழி நீங்கி நின்ருள்' (இது சிலேடை - திருவேங்கடமுடையான் விஷயத்தில் - திருமால் என்னும் பெயருடையனாதல், சயனிக்காமல் நின்ற கோலத்தில் இருத்தல். சங்கு சக்கரங்களைத் தொண்டைமானுக்குக் கொடுத்துச் சிலகாலமில்லாமலிருத்தல்; பெண் விஷயத்தில் - ஆசைமயக்கமுடையவள், விரஹத்தினால் படுக்கை கொள்ளாதவள், பிரிவால் இளைத்து வளை, மோதிரம், கழலப்பெற்றவள்)

(49) திருவேங்கடமலையானே! பட்டமஹிஷிகளால் அன்போடு மலர்க்கைகளால் வருடப்படும் உனது திருவடிகள் துஷ்டநிக்ரஹ சிஷ்ட பரிபாலனம் செய்யும் பொருட்டுக் கொடிய வனவாசம் செய்தனவே! இதென்ன செயற்கரிய செயல்!

(50) அழகிய கிளிகாள்! பாண்டவர்களுக்காக நூற்றுவரை அழித்தவனும், ஐம்படை ஏந்தினவனுமான திருவேங்கடவனிடம் எனது தூதாகச் சென்று எனது காதல் நோயைத் தெரிவியுங்கள். **(தலைவி தூதுவிடுதல்)**

**(தொடரும்)**

(தொடர் கட்டுரை)

# ஸ்ரீவேங்கடேச ப்ரபத்தி

ஸ்ரீமான் உ.வே. திருமலை
அநந்தாண்பிள்ளை க்ருஷ்ணமாசாரியர் - திருப்பதி.

*ரேகாமய த்வஜ ஸுதாகலசாதபத்ர*
*வஜ்ராங்குசாம்புருஹ கல்பக*
*சங்க சக்ரை: ।*
*பவ்யை ரலங்க்ருத தலௌ*
*பரதத்வ சிஹ்நை:*
*ஸ்ரீவேங்கடேச சரணௌ சரணம்*
*ப்ரபத்யே ।। (5)*

(ப) ஸ்ரீவேங்கடேச = திருவேங்கடமுடையானே, ரேகாமய = இரேகை வடிவான, த்வஜ ஸுதாகலச ஆதபத்ர வஜ்ர அங்குச அம்புருஹ கல்பக சங்க சக்ரை: = கொடி அம்ருதகலசம் குடை வஜ்ராயுதம் அங்குசம் தாமரை மலர் கற்பகமரம் சங்கு சக்கரம் என்கிற, பவ்யை: = மங்களகரமான, பரதத்வ சிஹ்நை: = பரம் பொருளுக்கு இருக்கவேண்டிய அடையாளங்களினால், அலங்க்ருத தலௌ = அழகு செய்யப்பட்ட உள்ளங்கால்களை உடைய, சரணௌ= (உன்) திருவடிகளை, சரணம் ப்ரபத்யே = தஞ்சமாகப் பற்றுகிறேன்.

(க) திருவேங்கடவா, உன் உள்ளங்கால்களில் சங்கு சக்கரம் பத்மம் முதலியவற்றின் ரேகைகள் இருப்பதால் நீயே பரம்பொருளென்று நிச்சயித்து, உன் திருவடிகளைச் சரணம் அடைகிறேன்.

(வி) பெரியாழ்வார் 'ஒரு காலில் சங்கு ஒரு காலில் சக்கரம் உள்ளடி பொறித்தமைந்த இருகாலுங்கொண்டு அங்கங்கெழுதினாற்போல் இலச்சினை பட நடந்து' (பெரியாழ் 1-7-6) என்றும், ஆளவந்தார் 'கதா புந:' (ஆள ஸ்தோ31) என்ற ச்லோகத்தில் 'திரிவிக்கிரமனே, சங்கு சக்கரம் கற்பகமரம் கொடி தாமரைமலர் அங்குசம் வஜ்ராயுதம் ஆகியவற்றை அடையாளமாகக் கொண்ட தேவரீருடைய திருவடித்தாமரையிணையானது அடியேனுடைய சிரஸ்ஸை எப்போதுதான் அலங்கரிக்கப்போகின்றது' என்றும் அருளிச்செய்தபடியே இவரும் திருவேங்கடமுடையானுடைய திருவடிகள் த்வஜம் அம்ருதகலசம் முதலிய நல்ல லக்ஷணங்களோடு கூடி விளங்குகின்றன என்கிறார் இந்த ச்லோகத்தில். இவை யாவும் பரம்பொருளுக்கு உரிய இலக்கணங்களென்றதனால், பரம்பொருளாகிய ஸ்ரீமந்நாராயணனே திருமலையில் திருவேங்கடமுடையானாக ஸேவை ஸாதிக்கிறானென்று அருளிச்செய்தபடியாம். 'மாயாவீ பரமாநந்தம் த்யக்த்வா வைகுண்ட்டமுத்தமம், ஸ்வாமி புஷ்கரிணீ தீரே ரமயா ஸஹமோததே' (சேஷ தர்மம்-வே-மா 48-13) ஆச்சரியமான சக்தி படைத்த ஸ்ரீமந்நாராயணன் பேரின்பமூட்டுமதான உயர்ந்த பரமபதத்தை விட்டுவிட்டு (நாம் உய்வதற்காகத் திருமலையில்) ஸ்வாமி புஷ்கரிணிக்கரையில் பிராட்டியோடு கூடிக்களிக்கிறான் என்ற புராணச்லோகம் இங்கு அனுஸந்திக்கத்தகும்.

*தாம்ரோதரத்யுதிபராஜித பத்மராகௌ*
*பாஹ்யைர் மஹோபிரபிபூத*
*மஹேந்த்ரநீலௌ ।*
*உத்யந்நகாம்சுபிருதஸ்த*
*சசாங்கபாஸௌ*
*ஸ்ரீவேங்கடேச சரணௌ சரணம்*
*ப்ரபத்யே ।। (6)*

(ப) ஸ்ரீவேங்கடேச = திருவேங்கடமுடையானே, தாம்ர உதரத்யுதி ப்ராஜித பத்மராகௌ = சிவந்த உட்புறங்களின் காந்தியால் ஜயிக்கப்பட்ட பத்மராக (கெம்பு) ரத்தினங்களை உடையவைகளும், பாஹ்யை: மஹோபி: = வெளிப்புறங்களிலுள்ள ஒளியால், அபிபூத மஹேந்த்ரநீலௌ = வெல்லப்பட்ட இந்த்ரநீல ரத்தினங்களை உடையவைகளும், உத்யத் நக அம்சுபி: = மேல் நோக்கி வீசும் நகங்களின் கிரணங்களால், உதஸ்த சசாங்க பாஸௌ = தள்ளப்பட்ட சந்திரனுடைய நிலாவை உடையவைகளுமான, சரணௌ = (உன்) திருவடிகளை, சரணம் ப்ரபத்யே = தஞ்சமாகப் பற்றுகிறேன்.

(க) திருவேங்கடவா, உன் உள்ளங்கால்களில் சிவந்த ஒளிக்குப் பத்மராக ரத்தினங்களும், புறங்கால்களின் கறுத்த காந்திக்குச் சந்திரனும் தோற்றோட, நான் மட்டும் ஓடாமல் உன் திருவடிகளுக்குத் தோற்றுச் சரணம் புகுகின்றேன்.

(vi) இந்தச் ச்லோகத்தில் 'உத்யந்நகாம்சுபி: உதஸ்த சசாங்க பாஸௌ' என்பதற்குச் சேர, 'ஸௌந்தர்ய ஸாராம்ருதஸிந்து வீசிச்ரேணீஷு பாதாங்குலிநாமிகாஸு, நயக்க்ருத்ய சந்த்ரச்ரிய மாத்மகாந்த்யா நகாவலீ சும்பதி ஸுந்தரஸ்ய ।।'' என்ற ஸுந்தர பாஹுஸ்தவச்லோகம் (67) அநுஸந்திக்கத்தகும். திருமாலிருஞ்சோலையழகருடைய திருமேனியின் அழகென்னும் அமுதக் கடலின் அலைவரிசைகளோ என்று உத்ப்ரேக்ஷிக்கலாம்படி இருக்கின்ற - அவரது திருவடி விரல்களில் உள்ள திருநகங்களின் வரிசையானது தனது காந்தியினால் சந்திரனது ஒளியையும் வென்று விளங்குகின்றது என்பது அதன் பொருள். எப்போதும் வளர்வதும் தேய்வதுமாக இருந்து கொண்டும் பூர்ணனாயிருக்கும் பௌர்ணமியன்றுகூட, களங்கத்தினால் ஏறக்குறையப் பாதிப்பகுதி ஒளி குறையப்பெற்றும் இருக்கிற சந்திரனது ப்ராக்ருதமான காந்தியைவிட, வளர்வதும் தேய்வதுமின்றிக் களங்கமற்று ஸதாபூர்ணங்களான எம்பெருமானுடைய திருவடிநகங்களின் அப்ராக்ருதமான காந்தி உயர்ந்ததென்று கருத்து.

*ஸப்ரேமபீதி கமலா கரபல்லவாப்யாம்*
*ஸம்வாஹநேऽபி ஸபதி க்லமமாததாநௌ ।*
*காந்தாவவாங்மநஸகோசர ஸௌகுமார்யௌ*
*ஸ்ரீவேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே ।। (7)*

(ப) ஸ்ரீவேங்கடேச = திருவேங்கடமுடையானே, ஸப்ரேம பீதி = ஆசையோடும் அச்சத்தோடும், கமலாகர பல்லவாப்யாம் = லக்ஷ்மீதேவியின் தளிரையொத்த திருக்கைகளால், ஸம்வாஹநேபி = பிடிக்க (வேண்டுமென்று தொட)ப்பட்ட போதிலும், ஸபதி = உடனே, க்லமமம் = வாட்டத்தை,, ஆததாநௌ = அடைபவைகளும், காந்தௌ = அழகியவைகளும், அவாக் மனஸ கோசர = வாக்குக்கும் மனஸ்ஸுக்கும் எட்டாத, ஸௌகுமார்யௌ = மென்மையை உடையவைகளுமான, சரணௌ = (உன்) திருவடிகளை, சரணம் ப்ரபத்யே = தஞ்சமாகப் பற்றுகிறேன்.

(க) திருவேங்கடவா, உலகமளந்தும் இலங்கை நடந்தும் நொந்த உன் திருவடிகளைப் பூவிற்பிறந்த உன் பிராட்டி, தன் தளிர்க்கைகளால் பிடிக்கவேண்டுமென்ற ஆசையும், பிடித்தால் வாடுமோ என்ற அச்சமும் மாறி மாறி நடக்க, பிடிக்கவும் பிடிக்காமலிருக்கவும் மாட்டாமல் ஒரு தடவை தொட்டாலும் உடனே வாடிவிடும்படி, வாய்கொண்டு, இத்தன்மையது என்று கூறவும், மனம்கொண்டு நினைக்கவும் இயலாத அத்தனை மெத்தென்றிருக்கும் உன் திருவடிகளை, (நான் சரணம் புகுந்தால் வாடாதென்று உறுதியுடன்) சரணம் புகுகிறேன்.

(வி) பெருமாள்திருவடிகளைப் பிடிக்கவேணுமென்று ஆசையும் பிடித்தால் வாடுமோ என்ற அச்சமும் பிராட்டிக்கு ஸ்வரூப ப்ரயுக்தமாகவும் குணப்ரயுக்தமாகவும் ஏற்படுகின்றன. ஸ்வரூபமாவது பெருமாளைப் பற்றத் தான் பத்நியாயிருக்கிற பிராட்டியின் உண்மைநிலை. குணமாவது பெருமாள் திருவடிகளிலுள்ள நிரதிசயஸௌகுமார்யம். நாயகன் திருவடிகளைப் பிடிக்கவேணுமென்ற விருப்பமும் பிடித்தால் வாடிவிடுமோ என்ற பயமும் அவனுக்குத் தான் நாயகியாயிருக்கும் பிராட்டியின் ஸ்வரூபம் காரணமாக உண்டாகின்றன என்றும், மிகமிக மெல்லிய திருவடிகளை வருடவேணுமென்ற ஆசையும் தான் வருடினால் அவற்றுக்கு வாட்டம் உண்டாகிவிடுமோ என்ற பயமும் பிராட்டிக்கு அத்திருவடிகளிலுண்டான மென்மையென்னும் குணம் காரணமாக உண்டாகின்றன என்று கொள்ளத்தக்கது.

இங்ஙனம் ஆசையும் அச்சமும் மாறிமாறிச் செல்ல, இறுதியில் ஆசை அச்சத்தை வெல்ல, பிராட்டி திருவடிகளைப் பிடித்ததனால் அவை வாடுகின்றன என்கிறுர் - 'ஸபதி க்லமம் ஆததாநௌ' என்பதனால். இதற்குப் பெருமாள் திருவடிகள் பிராட்டியின் திருக்கைகளைவிட மிகமிக மென்மையானவை என்பதில் நோக்கு.

இதற்கு நேர்மாருக பட்டர் அருளிச்செய்ததை இனிக்காண்போம். 'யத் ப்ருந்தாவந பண்டிதம்' என்று தொடங்கும் (ஸ்ரீரங்க-பூர்வ-124) ச்லோகத்தில் பெரியபெருமாள்திருவடிகளுக்கு 'லக்ஷ்மீ கரஸௌக்ய ஸாக்ஷி' என்றொரு விசேஷணம் இடப்பட்டுள்ளது. ஸ்ரீரங்கநாதனது திருவடியிணை பிராட்டி திருக்கைகளின் ஸ்பர்சத்தினால் ஸுகத்தை அனுபவிக்கின்றன என்பது இதன்பொருள். இது 'லக்ஷ்ம்யா: கரஸ்பர்ச ஜாதஸுகஸ்ய, ஸாக்ஷி= அநுபவித்ரு; பாதஸம்வாஹநகாலே இதி பாவ:' என்றுள்ள ஸம்ஸ்க்ருதவ்யாக்யானத்தினால் அறிய வெளிதாகும். பிராட்டியின் திருக்கரங்கள் தம்மேல் படுவதற்கு முன்பு பெருமாள்திருவடி

கள் வாடிவருந்தியிருந்தனவென்றும், அவை பட்டபின்பு தழைக்கப்பெற்று இன்பமெய்தினவென்றும் இதற்குக் கருத்து. பெருமாள் திருவடிகளைக் காட்டிலும் பிராட்டி திருக்கரங்கள் மிக மிக மென்மையானவை என்பதில் இதற்கு நோக்கு.

இங்ஙனம் சிலவிடங்களில் பெருமாளை உயர்த்திப் பேசுவதும் மற்றும் சிலவிடங்களில் பிராட்டியை உயர்த்திப்பேசுவதும் அனுபவ ரஸிகர்களுக்கு ஓர் அரிய விருந்தாகும். நிற்க.

எம்பெருமான், ஸ்ரீஸஹஸ்ர நாம ஸ்தோத்ரத்தில் 'புஷ்ப ஹாஸ:' (952ம் திருநாமம்) எனப்படுகிறான். புஷ்பத்தின் ஹாஸம் போன்ற ஹாஸமுடையவன் என்பது இதன் பொருள். ஹாஸமாவது மலர்ச்சியாய், மலருங்காலத்தில் காண்பவர் மனதில் களிப்பையூட்டும் பூஷ்பத்தின் மென்மைத் தன்மையைச் சொன்னபடியாம்.

இத்தகைய மென்மை பகவானுடைய திருமேனி முழுவதும் பரவியிருக்குமென்பது 'ரங்கபர்த்து: அபிலோசநசர்ச்சாம் ஸாஹஸாவலிஷு லேகயமாநம் । புஷ்பஹா இதி நாம துஹாநம் ஸௌகுமார்யம் அதிவாங்மநஸம் ந:' (ஸ்ரீரங்கபூர்வ- 88) என்று பட்டர் அருளியது கொண்டு தெரிகின்றது. ஸேவிப்பவர்களின் கண்கள் தன்னை உற்று நோக்கினால் அதைக் கூட முரட்டுச் செயல்களில் ஒன்றாகக் கல்வெட்டாக்குவதும், 'புஷ்பஹாஸ:' என்னும் திருநாமத்தை உண்டாக்குமதுமான ஸ்ரீரங்கநாதனுடைய திருமேனியின் ஸௌகுமார்யமானது (மென்மை) நமது வாக்குக்கும் மனதுக்கும் எட்டாதது என்பது இதன பொருள்.

இங்ஙனம் திருமேனி முழுதுமுள்ளதாக பட்டர் அருளிய ஸௌகுமார்யத்தை ப்ரதிவாதி பயங்கரம் அண்ணா 'ஸப்ரேம பீதி' என்னும் இந்த ச்லோகத்தில் திருவடிகளிலுள்ளதாக அருளிச்செய்தார்.

'வடிவிணையில்லா மலர்மகள் மற்றை நிலமகள் பிடிக்கும் மெல்லடியை' (திருவாய் 9-2-10) என்ற நம்மாழ்வார் ஸ்ரீஸூக்தியும், 'அவர்களும் (மலர்மகளும் நிலமகளும்) திருவடிகளைப் பிடிக்கப்புக்கால் பூத்தொடுவாரைப் போலே 'கன்றுகின்றதோ' என்று கூசித் (அஞ்சித்) தொட வேண்டும்படியாயிற்று ஸௌகுமார்யமிருப்பது' என்ற அதன் ஈட்டு ஸ்ரீஸூக்தியும் இதற்கு மூலமாக நினைக்கத்தகும்.

லக்ஷ்மீமஹீததநுரூப நிஜாநுபாவ

நீளாதி திவ்யமஹிஷீ

கரபல்லவாநாம் ।

ஆருண்யஸங்க்ரமணத: •

கில ஸாந்த்ரராகௌ

ஸ்ரீவேங்கடேச சரணௌ சரணம்

ப்ரபத்யே ।। (8)

(ப) ஸ்ரீவேங்கடேச = திருவேங்கடமுடையானே, லக்ஷ்மீ மஹீ ததநுரூப நிஜ அநுபாவ நீளா ஆதி = திருமகள் மண்மகள் அவ்விருவரோடொத்த மாறாத மகிமைபெற்ற ஆயர்மகள் முதலிய, திவ்ய மஹிஷீ = சிறந்த மனைவிகளுடைய, கரபல்லவா நாம் = தளிர் போன்ற திருக்கைகளினுடைய, ஆருண்ய ஸங்க்ரமணத: கில = சிவந்த நிறத்தின் தொற்றுதலால் போலும், ஸாந்த்ர ராகௌ = மிக்க சிவப்புநிறம் பெற்ற, சரணௌ (உன்) திருவடிகளை, சரணம் ப்ரபத்யே = தஞ்சமாகப் பற்றுகிறேன்.

(க.) திருவேங்கடவா, இயற்கையாகச் (சிறிது) சிவந்திருக்கும் உன் திருவடிகள் மிகச் சிவந்தனவாய்த் தோன்றுவது, ஸ்ரீதேவி பூதேவி நீளாதேவி முதலிய உன் தேவிகள் தம் தளிர்போன்ற கரங்களால் வருடும் போது அக்கரங்களிலிருந்து சிவந்த நிறம் தொற்றிக்கொண்டதனால் இருக்கலாம் என்று ஊகிக்கும்படி இருக்கும் உன் திருவடிகளைச் சரணம் அடைகிறேன்.

(வி) இந்த ச்லோகத்துக்குச் சேர 'வந்தாரு ப்ருந்தாரக மௌலிமாலா யுஞ்ஜாநசேத: கமலாகரேப்ய: । ஸங்க்ராந்தராகா விவ பாதபத்மௌ ஸ்ரீரங்கபர்த்துர் மநவை நவை ச ।।' (ஸ்ரீரங்க பூர்வ 123) என்ற பட்டர் ஸ்ரீஸூக்தி அநுஸந்திக்கவுரியது. தம்மை வணங்கும் போது. தேவர்களின் (சிவந்த மணிகள் அழுத்தப்பெற்ற) கிரீடஸமூஹமென்ன, தம்மை த்யானிக்கும் போது, யோகிகளின் சிவந்த (பக்தியுள்ள) திருவுள்ளங்களென்ன ஆகிய இவற்றிலிருந்து சிவப்பு நிறம் தொற்றிக்கொண்டதோ என்று எண்ணும்படியாக அமைந்த ஸ்ரீரங்கநாதனின் திருவடித்தாமரைகளை அடியேன் த்யானிக்கிறேன் துதிக்கவும் செய்கிறேன் என்பது இதன் பொருள். பெருமாள் திருவடிகள் இயல்பாகவே சிவந்திருந்தாலும் கவிகளின் ஸரணிக்கு ஏற்ப ஹேதூத்ப்ரேக்ஷை பண்ணியபடி.

நித்யாநமத்விதிசிவாதி கிரீடகோடி

ப்ரயுப்த தீப்த நவரத்னமஹ:

ப்ரரோஹை: ।

*நீராஜநா விதிமுதார*

*முபாததாநௌ*

*ஸ்ரீவேங்கடேச சரணௌ சரணம்*

*ப்ரபத்யே* ।। (9)

(ப) ஸ்ரீவேங்கடேச = திரு வேங்கடமுடையானே, நித்ய ஆநமத்விதி சிவ ஆதி = எப்போதும் வணங்கிக்கொண்டிருக்கிற பிரமன் சிவன் முதலியவர்களுடைய, கிரீட கோடி = கிரீடங்களின் நுனிகளில், ப்ரத்யுப்த தீப்த = பதிக்கப்பட்டு ஒளி வீசுகின்ற, நவரத்ந = ஒன்பது வகையான ரத்தினங்களுடைய, மஹ; ப்ரரோஹை: = முளைகள் போன்ற ஒளிகளினால், உதாரம் = உயர்ந்த, நீராஜநா விதிம் = ஹாரத்தி செய்வதை, உபாததாநௌ = ஏற்றுக்கொள்கின்ற, சரணௌ = (உன்) திருவடிகளை, சரணம் ப்ரபத்யே = தஞ்சமாகப் பற்றுகிறேன்.

(க) திருவேங்கடவா, ப்ரஹ்மாதி தேவர்கள் உன்னை வணங்கினபடியே இருக்க, அவர்கள் கிரீட நுனிகளில் அழுத்தப்பெற்ற மணிகளின் ஒளிகள் சுழல்வதைத் தமக்குக் கர்ப்பூர ஹாரதியாக ஏற்றுக்கொள்கின்றனவோ என்று நினைத்தற்குரிய உன் திருவடிகளைச் சரணம் அடைகிறேன்.

இந்த ச்லோகத்துக்குப் பொருந்துமாறு 'மநுகுலமஹீபால வ்யாநம்ர மௌலி பரம்பரா மணிமகரிகா ரோசிர் நீராஜிதாங் ரிஸரோருஹ: (ஸ்ரீரங்க உத்தர 77) என்று பட்டர் அருளியது நினைக்கததக்கது. மநுகுலத்திலுதித்த அரசர்களுடைய வணங்கிய (தலைகளிலுள்ள) கிரீடங்களின் வரிசைகளில் பெண் மீனுருவத்தில் அமைக்கப்பட்ட மணிகளின் ஒளிகளாலே ஆலத்தி வழிக்கப்பட்ட திருவடித்தாமரைகளையுடையவர் பெரியபெருமாளென்பது இதன் பொருள்.

*விஷ்ணோ: பதே பரம இத்யுதித*

*ப்ரசம்ஸௌ*

*யௌ மத்வ உத்ஸ இதி போக்ய*

*தயாऽப்யுபாத்தௌ* ।

*பூயஸ்ததேதி தவ பாணி*

*தலப்ரதிஷ்டௌ*

*ஸ்ரீவேங்கடேச சரணௌ சரணம்*

*ப்ரபத்யே* ।। (10)

(ப) ஸ்ரீவேங்கடேச = திரு வேங்கடமுடையானே! யௌ - எத்திருவடிகள், "விஷ்ணோ: பரமே பதே" இதி-விஷ்ணுவின் உயர்ந்த திருவடிகளில் என்று, உதிதப்ரசம்ஸௌ = உயர்ந்தனவாக (வேதத்தினால்) சொல்லப்பட்ட புகழ்ச்சியையுடையவனவோ, மத்வ உத்ஸ இதி = எவைகள் தேன் பெருகுமிடம் என்று, போக்யதயாபி = அனுபவிக்கத்த தக்கவைகளாகவும், உபாத்தௌ (வேதத்தினால்) எடுத்துக் கூறப்பெற்றனவோ,

பூய: = மறுபடியும், ததா இதி = இவைகள் அப்படிப்பட்டவைகளே என்று (இப்போது) தவ = உனது, பணி தல ப்ரதிஷ்டௌ = (வலக்) கைத்தலத்தினால் சுட்டிக்காட்டவும் பெற்றனவோ, சரணௌ = அத்தகைய (உன்) திருவடிகளை, சரணம் ப்ரபத்யே = தஞ்சமாகப் பற்றுகிறேன்.

(க) திருவேங்கடவா, உன் வலத்திருக்கை, எவற்றை, விஷ்ணுவின் திருவடிகள் மிக உயர்ந்தவையென்றும் தேனைப் பெருக்குவதால் அவை அனைவராலும் அனுபவிக்கத்தக்கவையென்றும் வேதம் புகழ்ந்து கூறிற்றோ, அவையே இவை' என்று சுட்டிக்காட்டுகிற உன் திருவடிகளைச் சரணம் அடைகிறேன்.

(வி) 'விஷ்ணோ: பதே பரமே மத்வ உத்ஸ:' (விஷ்ணு ஸூக்தம் 5) என்கிற சுருதியின் பொருள் கருதப்பட்டதென்பது இந்த ச்லோகத்தில் அச்சொற்கள்தம்மையே பெய்திருப்பது கொண்டு எளிதில் அறியலாகும். விஷ்ணுவின் மிகச் சிறந்த திருவடிகளில் தேன்வெள்ளம் பெருகுகின்றதென்பது இதன் பொருள். தாமரையிலிருந்து தேன் பெருகுவது போலத் திருவடித்தாமரைகளிலிருந்தும் தேன்பெருகுமென்க.

'எனது பாதங்கள் மிகச் சிறந்தனவென்றும் தேன்வெள்ளமிடுவதனால் மிகவும் போக்யங்களென்றும் வேதத்தின் வாயிலாக என்றும் கேட்டேபோருகிற பக்தர்களே, எப்போதாவது அவற்றை நீங்கள் நேரே காண வேண்டாமா? இதோ காட்டுகிறேன் பாருங்கள்' என்று வேதவெற்பில் எழுந்தருளியிருக்கும் வேதப்பொருளான வேங்கடவன் வேதம் போற்றிய தன் திருவடிகளைத் தனது வலது திருக்கையினால் காட்டி, முற்காட்டிய ச்ருதிவாக்கியத்தை மெய்ப்பிக்கிறுனென்க.

இந்தத் தேன்வெள்ளம் திருவடிகளின் ஒளிவெள்ளமே என்றருளிச் செய்கிறுர் கூரத்தாழ்வான். 'ச்ரேய: கிரந்து கிரணா: சரணாரவிந்த நிஷ்யந்தமாந மகரந்த ரஸௌக தேச்யா: । தஜ்ஜா: ச்ருதேர் மதுந உத்ஸ இதி ப்ரதீதா:' (அதிமாநுஷ-1) என்பது காண்க. அழகிய மணவாளனுடைய திருவடித்தாமரைகளிலிருந்து பெருகும் தேன் வெள்ளம் போன்றவையும், வேதத்திலிருந்து தேன்வெள்ளமென்று அறியப்பட்டவையுமான - அத் திருவடிகளிலிருந்து உண்டான கிரணங்கள் நமக்கு நன்மை

யைப் பரப்புக என்பது இதன் பொருள்.

அத்திருவடிகளிலிருந்து பெருகும் தேன்வெள்ளமே கங்கையாயிற்று என்பதும் உண்டு.

பார்த்தாய தத்ஸத்ருச ஸாரதிநா த்வயைவ
யௌதர்சிதௌ ஸ்வசரணௌ சரணம் வ்ரஜேதி ।
பூயோऽபி மஹ்யமிஹ தௌ கரதர்சிதௌ தே
ஸ்ரீவேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே ।। (11)

(ப) ஸ்ரீவேங்கடேச = திருவேங்கடமுடையானே, பார்த்தாய = அர்ஜுனனுக்கு, தத்ஸத்ருச ஸாரதிநா = அவனுக்குக் தகுந்த தோப்பாகனான, த்வயா ஏவ= (கண்ணனாயவதரித்த) உன்னாலேயே, சரணம் வ்ரஜ இதி = (இவற்றைத்) தஞ்சமாகப் பற்று என்று, யௌ ஸ்வசரணௌ = எந்த உன் திருவடிகள், தர்சிதௌ = காட்டப் பெற்றனவோ, பூய: அபி = மறுபடியும், இஹ= இத்திருமலையில், மஹ்யம் = எனக்கு, தவயா ஏவ = திருவேங்கடவனாயவதரித்த உன்னாலேயே, எவைகள், கரதர்சிதௌ = வலத் திருக்கையினால் காட்டப்பெற்றனவோ, தௌ = அப்படிப்பட்ட, தே சரணௌ = உன் திருவடிகளை, சரணம் ப்ரபத்யே = தஞ்சமாகப் பற்றுகிறேன்.

(க) திருவேங்கடவா, எந்தத் திருவடிகளை முன்பு அர்ஜுனனுக்கு, சரணம் அடை என்று காட்டினையோ அவற்றையே இன்று எனக்கு சரணம் அடை என்று காட்டிக்கொண்டிருக்கிறுயாகையால் அர்ஜுனன் சரணமடைந்து பயன் பெற்றது போல் நானும் பயன் பெற, அந்த உன் திருவடிகளைச் சரணம் அடைகிறேன.

(வி) தத்ஸத்ருசஸாரதிநா - அர்ஜுனனுக்குத் தகுந்த ஸாரதி - அர்ஜுனனிடத்தில அனபுள்ள ஸாரதி. கர்ணனிடம் அனபில்லாத ஸாரதியான சல்லியனைப் போலல்லாமல், அர்ஜுனனிடம் அன்பு மிக்க ஸாரதி ஸ்ரீக்ருஷ்ணனென றபடி. 'தாழ்ந்த தனஞ்சயறகாகி மணித்திண்தேர் ஊரந்தவன்' (பெரியாழ் 1-9-4) என்றவிடத்தில் (ஆகி) என்பதற்கு 'பக்ஷபாதியாய்' என்று மணவாளமாமுனிகள் அருளிச்செய்த பொருளையே இங்கு அண்ணு 'ஸத்ருச' என்ற சொல்லால் குறித்துள்ளாரென்று கொள்ளலாம்.

அர்ஜுனனும் கண்ணபிரானும் முறையே நரனுடையவும் நாராயணனுடையவும் அவதாரமாகக் கூறப்படுவதனால் கண்ணபிரான் அர்ஜுனனுக்குத் தகுந்த தேர்ப்பாகன் எனப் பட்டானென்றும் கொள்ளலாம். முன்பு நரன் சிஷ்யனாய்த் தாழ நிற்க, நாராயணன் ஆசார்யனாய் உயர்ந்து நின்று திருமந்த்ரத்தை உபதேசித்தான். இப்போது நராவதாரமான அர்ஜுனன் ரதியாய் உயர்ந்திருக்க, நாராயணுவதாரமான கண்ணபிரான் ஸாரதியாய்த் தாழ்ந்துநின்று சரம ச்லோகத்தை உபதேசித்தான் என்னும் வாசி காண்க. நரன் நாராயணனுக்குத் தக்க சிஷ்யனானாற்போலக் கண்ணனும் அர்ஜுனனுக்குத் தக்க தேர்ப்பாகனானான் என்க.

ஸ்ரீக்ருஷ்ணன் பார்த்தனைக் குறித்து 'மாமேகம் சரணம் வ்ரஜ' (கீதை 18-) ( என்னையே தஞ்சமாகப் பற்று) என்று தன்னையே தஞ்சமாகப் பற்றும்படி விதித்தானேயொழிய தன் திருவடிகளைப் பற்றும்படி நியமிக்கவில்லையே. ஆகையால் இந்த ச்லோகத்தில் தன் திருவடிகளைத் தஞ்சமாகப் பற்றும்படி காட்டினானென்று கூறுவது எப்படிப் பொருந்து எனின் கூறுவோம்.

இந்த சரமச்லோகமாகிற விதியின் அநுஷ்டானத்தைக் கூறுகின்ற த்வயமந்த்ரத்தில் 'ஸ்ரீமந்நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே' என்று வேதபுருஷன் திருவடிகளையே தஞ்சமாகப் பற்றியதாக உள்ளதனாலும், பரமவைதிகர்களான நம்மாழ்வாரும் திருமங்கையாழ்வாரும் முறையே 'திருவேங்கடத்தானே - உன்னடிக் கீழமர்ந்து புகுந்தேனே' (திருவாய் 6-10-10) என்றும் 'ஆழி வண்ண நின்னடியிணையடைந்

## ஸ்ரீமணவாள மாமுனிகளுக்கு வேறு பெயர்கள்

பெரிய ஜீயர், மணவாள மாமுனி, ஸௌம்ய ஜாமாத்ரு யோகீந்த்ரர், ரம்ய ஜாமாத்ரு யோகீந்த்ரர், யதீந்த்ர ப்ரவணர், அழகிய மணவாள ஜீயர், காந்தோபயந்தா, வரவர முநி, வர யோகி, இராமாநுசன் பொன்னடி, ருசிர ஜாமாத்ரு யோகீந்த்ரர்.

திரு. இல. ஹரிவல்லபை - சேடப்பாளையம்.

# திருத்துழாய்

திருவாராதனத்துக்குத் திருத்துழாய் மிகவும் முக்கியமானது. சுத்தமான இடத்தில் முளைத்துள்ள செடிகளிலிருந்து திருத்துளசி எடுக்க வேண்டும். வீட்டிலேயே துளசி செடிகளை வளர்ப்பது அவசியம். இடமில்லாவிட்டால் தொட்டிகளில் வளர்க்கலாம். துளசி செடியில்லாத வீட்டில் வசிக்கலாகாது என்று சாஸ்த்ரம் சொல்லும். திருத்துழாய் வனத்தில் எப்பொழுதும் பகவான் வாஸம் பண்ணுகிறுன். அவனுக்கு மிகவும் உவப்பானது திருத்துழாய்.

திருத்துழாய்ச் செடிகளிடம் சென்று துளசிப் பிராட்டிக்கு "துளஸ்யம்ருத ஜன்மாஸி ஸதா த்வம் கேசவப்ரியே! கேசவார்த்தம் லுனாமி த்வாம்வரதாபவ சோபனே" என்று அநுசந்தித்துத் தண்டம் சமர்ப்பித்து நகம் படாமல் நான்கு தளங்கள் உள்ளதாக எடுத்தல் வேண்டும். திருத்துளஸியையும் புஷ்பங்களையும் திருப்பூக்கடையில் சேகரிக்க வேண்டும். காகிதத்திலும் மடியிலும் கையிலும் ஆமணக்கு எருக்கு இலைகளிலும் கொண்டு வரக்கூடாது. வாழை மந்தாரை முதலிய இலைகளில் எடுத்துக்கொண்டு வரலாம்.

ஞாயிறு, வெள்ளி, அஷ்டமி, துவாதசி, சங்கராந்தி, யுகாதி முதலிய நாள்களிலும், இரவிலும் திருத்துழாய் எடுக்கலாகாது. தேவைக்கேற்றபடி முன்நாளிலேயே எடுத்து வைத்துக்கொள்ள வேண்டும்.

ஸ்ரீவைஷ்ணவம் என்ற நூலிலிருந்து
தொகுத்தவர்: கமலா மாரியப்பன் - கோவை.

---

துர்ஜனஸ்ய ப்ரசம்ஸா தஸ்ய
மரணேன ஸாகம் விவர்ணி பவந்தி ।
ஸஜ்ஜனஸ்ய நிந்தா தஸ்ய
மரணாத் பூர்வம் விவர்ணி பவந்தி ॥

பொருள்: ஒரு தீயவனைப் போற்றிப் பேசப்படும் வார்த்தைகள் அவன் இறக்கும்போது அவனோடு சேர்ந்து இறந்து விடுகின்றன. ஒரு நல்லவனைத் தூற்றிப் பேசப்படும் வார்த்தைகள் அவன் இறப்பதற்கு முன்பாகவே இறந்து விடுகின்றன.

ஆகவே அரிதான இம்மானிடப் பிறவியில் மனிதன் நல்லவைகளைப் போற்றியும் தீயவைகளை வெறுத்து ஒதுக்கியும் வாழ்ந்து இறை அருளைப் பெறவேண்டும்.

--கௌடியல்யரின் அர்த்த சாஸ்திரம்
அரு. சோலையப்பன் தொகுத்த 'இனியவை 200'
என்ற நூலிலிருந்து
திரு. சி. வெங்கடேசன் - ஓசூர்.

---

தேன் அணிபொழில் திருவரங்கத்தம்மானே' (பெரியதிரு 5-8-1) என்றும் திருவடிகளையே தாம் தஞ்சமாகப் பற்றியதாக அருளிச்செய்கையாலும், ஆளவந்தார் 'தத்வபாத மூலம் சரணம் ப்ரபத்யே' (ஸ்தோத்ரரத்னம்-22) என்றும், எம்பெருமானார் 'ஸ்ரீமந் நாராயண... த்வத் பாதாரவிந்தயுகளம் சரணமஹம் ப்ரபத்யே' (சரணாகதிகத்யம்-5) என்றும் திருவடிகளையே சரணமாகப் பற்றியதனாலும் இப்படியுண்டான வேத வைதிக புருஷர்களின் அநுஷ்டானங்களுக்குச் சேர, வேத வேத்யனான கண்ணபிரான் அருளிய சரமச்லோகத்திலும் மாம் என்பதற்கு என்னை என்று பொருளிருப்பினும் 'என் திருவடிகளை' என்று கூறுவதில் கண்ணன் திருவுள்ளமாயிருக்கலாமென்று கருதியே இதில் அண்ணு 'யௌ தர்சிதௌ ஸ்வசரணௌ சரணம் வ்ரஜேதி' என்று கண்ணன் தன் திருவடிகளைப் பற்றும்படி காட்டியதாக அருளிச்செய்தார். விதிவாக்யமான சரமச்லோகமும் அதன் அனுஷ்டான வாக்யங்களும் ஒத்திருக்க வேண்டுமென்றோ?

சேஷிபக்கல் சேஷபூதன் இழியும் துறை திருவடிகளாகையால் அத்திருவடிகளையே தஞ்சமாகப் பற்றுவது வேத வைதிக புருஷர்களின் அனுஷ்டானமாகவும், என் பாதங்களைத் தஞ்சமாகப் பற்று என்பதற்குக் கூசி, என்னைப் பற்று என்றருளியது வேதவேத்யனான பகவானுடைய விதியாகவும் அமைந்துள்ளது மிக மிகப் பொருத்தமேயாகும்.

(தொடரும்)





# திருமலை - திருப்பதி

திருமதி. ஜி. கௌசல்யா விஜயன் - வேலூர்.



பஞ்ச பூதங்களில் ஒன்று மண். மண்ணின் மூலம் மலை. மலைப்பாறைகள் சிதைவடையும் பொழுது மண்ணாக மாறுகின்றது என்பது அறிவியலின் முடிவு. மலைகள் இயற்கை அரண்களாக விளங்குகின்றன. நம் பரத கண்டத்தில் உள்ள எந்த மலைக்கும் இல்லாத சிறப்பு 'திருமலை'க்கு உண்டு. 'மலை' என்ற பெயர்ச் சொல்லுக்கு அடையாகத் 'திரு' என்ற சொல் சேர்ந்து இருப்பதே அச்சிறப்பு ஆகும். திரு என்றால் 'செல்வம்' என்று ஒரு பொருளும் உண்டு. செல்வம் நிறைந்துள்ள மலை என்றும் திருமலைக்குப் பொருள் சொல்லலாம். மலையில் கிடைக்கும் இயற்கை வளங்களை மட்டும் இச்சொல் குறிப்பிடவில்லை. அதற்கும் மேலாக இந்திய நாட்டு இந்து மக்கள் அனைவரும் தம் உழைப்பில் ஒரு சிறு துளியையேனும் இம்மலையில் கொண்டு வந்து சேர்க்கும் இடமாக இது திகழ்கிறது. இப்படிச் செல்வம் இம்மலையில் வந்து சேர்வதற்கு ஆதிசங்கரர் அமைத்த 'தன் ஆகர்ஷண' சக்கரமும் ஒரு காரணம் என்பர்.

## திருமலை தோற்றுவாய்

'திருமலை' என்று அழைக்கப்படும் இம்மலையின் தோற்றம் குறித்துப் புராணச் செய்தி ஒன்று உண்டு. 'திருமாலை வணங்க 'வாயுபகவான்' வைகுண்டத்திற்கு வந்தார். அங்கே துவாரபாலகனாக இருந்த 'ஆதிசேடன்', வாயுவைத் தடுத்தார். இதனால் திருமாலை தரிசிக்க முடியாமல் போகுமே என்ற வருத்தம் மேலிட எப்படியாவது தரிசனம் கிடைகக வேண்டும் என்ற வேகத்தில் வாயுபகவான் ஆதிசேடனுடன் வாக்குவாதம் செய்தார். அந்த நேரத்தில் அங்கு வந்த நாரதர இருவரையும் சமாதானம் செய்யும் நோக்கத்துடன் போட்டி ஒன்றினை ஏற்படுத்தினார். அதன்படி "வைகுண்டத்தைத் தாங்கி நிற்கும் மேருமலையை ஆதிசேஷன் வளைத்துப்பிடித்துக்கொள்ள வேண்டும். யார் வெற்றி பெருகிறார்களோ அதன்படி அவர்களது விருப்பம் நிறைவேறும்" என்று சொன்னார். போட்டி ஆரம்பமானது. பலத்த காற்று வீசியது. அப்பொழுது மேருமலையை இருக்கிப் பிடித்திருந்த ஆதிசேடன் வாயுவின் வேகத்தை எட்டிப்பார்க்கத் தலையைச் சற்று உயர்த்தினார். இதுதான் சமயம் என்று வாயு மேருமலையின் ஒரு பகுதியைத் தன் வல்லமையால் பெயர்த்து எடுத்துக் கொண்டு வந்து 'சுவர்ணமுகி' ஆற்றின் அருகில் போட்டார். அம்மலையே 'திருமலை'. மலையடிவாரமே 'திருப்பதி' என்று பெயர் பெற்றது.

திருமலை தனிமலை அல்ல, ஒரு தொடராக அமைந்துள்ளது. ஸ்ரீசைலத்தில் ஆரம்பமாகி அகோபிலம் வரை அகனறு திருமலையில் முடிவடைகிறது. இதன் தோற்றம் ஒரு பெரிய பாம்பு தன் படங்களைத் திருமலையில் வைத்து வாலை கிருஷ்ணா நதிவரை நீட்டியிருப்பதைப் போன்று காட்



சியளிக்கிறது. ஏழுமலைகளுககு அப்பால இநத ஏழு சிகரங் களையும் விட மிக உயரமான ஏழாவது மலையில் மூவாயிரம் அடிகளுக்கு மேல் உயர்நத 'நாராயணகிரியில்' வேங்கடாச லததில் அமர்நதுளள பெரு மாளே வேஙகடாசலபதி.

## தெய்வங்களின் தோற்றம்

பல மலைகள இபபூமியில இருக்கத திருமால் தன இருப் பிடமாக இமமலையைத் ஏன தேர்நதெடுததார?

'ஞானவி நதிககரை யில்' 'காசிப முனிவர்' யாகம செய்தார். யாகபலனை ஏற்கத தகுதியுடையவர் யார? என்று அவரால் முடிவு செய்யமுடிய வில்லை. பின் பிருகு முனிவ ரைக் கேட்டார். அவர் தகுதி யுடையவரைத தேடிச்சென்ருர். முதலில் பிரம்மலோகம் சென் ருர். பிரம்மனை அங்குக் காண வில்லை; கைலாயம் சென்ருர். சிவன் பார்வதியுடன் 'சிவபார் வதி'யாக இருந்ததைக் கணடார். கடைசியாக வைகுண்டம் சென் ருர். அங்குத் திருமால் லட் சுமி சமேதராய் பாம்பணையில் பள்ளி கொண்டிருந்ததைக் கண் டார். இக்காட்சிகளால் மனம் வெகுண்ட 'பிருகு முனிவர்' தம் பாதங்களால் திருமாலின் மார்பகத்தில் உதைத்துவிட்டார். ஆனால், திருமாலோ சினம டையாது பிருகுமுனிவர் பாதங் களை வணங்கினார். இதனால் திருமால் யாக பலனை அடை யும் தகுதியுடையவன் என்று அறிந்த முனிவர்கள் யாக பல னைத் திருமாலுக்கு அளித் தனர். இதனால் சினமடைந்த 'லட்சுமி' வைகுண்டத்தைவிட்டு வெளியேறினார். மேலும் பிருகு முனிவரின் பாதம் தன் மேல் பட்டதால் கோபமுற்ற லட்சுமி பிருகுமுனிவர அந்தணர் என்ப தால் "அவ்வினத்தைச் சேர்ந்த வர்கள் வறுமையுற்று வருந்த வேணடும்' என்று சாபமிட்டார்.

'லட்சுமி' வைகுண்டத்தை விட்டு நீங்கியதால் வைகுண் டம வறணடது. அவரிட்ட சாபததால பூலோகம் வறண் டது. திருமாலும் வைகுண் டம விட்டுப் பூலோகம் வந் தார. ஆதிவராகர கோவில கொணடுள்ள 'திருமலைக்கு' வந் தார. அவரிடம் தான் தஙக இடம் கேட்டார. வராக மூர்த் தியும் வந்திருப்பது யார் என்று அறிந்து கொணடார். குளக்க ரையின் தென்பகுதியைத் திரு மாலுக்கு அளித்தார்.

## பத்மாவதியின் தோற்றம்

திருமலையின் தென்கிழக்கில் இருப்பது தொண்டை மண்ட லம். இப்பகுதியை ஆண்ட மன்னன் 'சுதர்மன்'. அவர் தன் இருமகன்களான 'ஆகாசராஜன்' 'தொண்டைமான்' என்ற இரு வருள் மூத்தவனான ஆகாசரா ஜனுக்கு பட்டமளித்துத் தான் 'துறவு' மேற்கொண்டு காட் டிற்குத் தவம் செய்யச் சென்று விட்டான். பல ஆண்டுகளாகி யும் குழந்தை பாக்கியம் இல் லாத ஆகாசராஜன் குழந்தை வேண்டி யாகம் ஒன்று செய்யத் தங்கக் கலப்பையால் நிலத்தை உழுதான். அப்பொழுது பெட்டி ஒன்று கிடைத்தது. அதற் குள் தாமரைமலரில் பெண் குழந்தை ஒன்றைக் கண்டான். அப்பெண் குழந்தையைத் தன் குழந்தையாக ஏற்று வளர்த் தான். 'பத்மாவதி' என்று பெய ரிட்டு அழைத்தான்.

திருமால் 'ஸ்ரீநிவாசன்' என்ற பெயருடன் திருமலையில் தங்க லட்சுமி, 'பத்மாவதி' என்ற பெயருடன் ஆகாசராஜனால் வளர்க்கப்பட்டாள். திரு மாலும், லட்சுமியும் உள்ள இடமே வைகுண்டம். எனவே 'திருமலை' பூலோக வைகுண் டம் என்று அழைககப்படுவதில் வியப்பொன்றும் இல்லை. இந் நிலையில் 'நாராயண வரத்து' அகத்தியாச்ரம நந்தவனத் தில் தோழிகளுடன் விளையா டிக்கொண்டிருந்த பத்மாவதியும், வேட்டையாடிககொண்டு அவ்வ ழியே வந்த ஸ்ரீநிவாசனும சந தித்துக் கொள்கின்றனர். லட் சுமியின் உள்ளத்தில் 'திருமால்' உருவம் பூர்வத்தில் பதிநதது. இருவருக்கும் திருமணம் நிச் சயிக்கப்படுகிறது. திருமணத் திற்கு வேண்டிய பணம் இல் லாததால் ஸ்ரீநிவாசன், குபேர னிடம் ஒருகோடியே பதினான்கு வராகன்கள் கடன் வாங்குகிருர். கடன் வாங்கிக்கல்யாணம் இனிது நிகழ்கிறது. கடன் கலியுக இறுதிக்குள் செலுத்தப் படும் என்பது கடன் பத்திரம் தரும் செய்தி. இதற்கு சாட்சிகள் பிரம்மனும், சுவாமி கோவிலின் அருகில் உள்ள குளக்கரையில் உள்ள இரு அரச மரங்களும் ஆகும்.

## தமிழகத்தின் வடஎல்லை திருமலை

வெங்கடாசலபதி திருமக ளைத் தன்மார்பில் வைத்திருப் பதால்தான் பத்மாவதி திருப்ப தியில் உள்ள அலர்மேல்மங்கா புரத்தில் கோயில் கொண்டுள் ளார். இன்று நாம் காணும் திருப்பதி ஆந்திராவில் உள் ளது. சென்னையிலிருந்து சுமார் 130 கி.மீ. தூரத்தில் உள்ளது. அங்கு இப்பொழுது பேசப்படும் மொழி தெலுங்கு என்ருலும் தமிழ் புதுமொ ழியாகத் திருப்பதி-திருமலையில்

கருதப்படவில்லை. சங்க காலத்தில் தமிழகத்தின் எல்லையை

"வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத்
தமிழ்கூறும் நல்லுலகத்து"

என்று தொல்காப்பியம் வரையறை செய்கின்றது.

## இலக்கியங்களில் திருமலை

காலப்போக்கில் தமிழின் சிறு, சிறு மாறுதல்களைப் பெற்றுத் தெலுங்குமொழி உருவாயிற்று. தமிழகத்துடன் இணைந்து விளங்கிய வேங்கடமலையின் இயற்கை அழகையும் வேங்கடேசனின் எழில் வடிவினையும் சங்க இலக்கியங்கள் பலவும் பலவாறுகப் போற்றுகின்றன. இவற்றை எல்லாம் ஒன்று திரட்டியது போன்று இளங்கோவடிகள் தம் முத்தமிழ்க் காப்பியமாம் சிலப்பதிகாரத்தில் மாங்காட்டு மறையோன் காணவிரும்பிய திருமலையின் அழகினை அழியா ஓவியமாகக் காடுகாண் காதையில் தீட்டுகின்றுர்.

"வீங்கு நீரருவி வேங்கடமென்று
ஓங்கு உயர் மலையது உச்சிமீமிசை
விரிகதிற் ஞாயிறும் திங்களும்
விளங்கி
இரு மருங்கு ஓங்கிய இடைநிலைத்
தானத்து
நன்னிற மேகம் நின்றது போலப்
பகையணங்கு ஆழியும்
பால்வெண்சங்கமுற
தகைபெறு தாமரைக் கையிலேந்தி
நலங்கிளர் ஆரம் மார்பில் பூண்டு
பொலம் பூ ஆடையில் பொலிந்து
தோன்றிய
செங்கண் னெடியோன் நின்ற
வண்ணமும்"

எ்ைபது இளங்கோவின் வாக்கு. அதுமட்டுமல்லாமல் திருமால் மீது பக்தி கொண்டு அப்பக்தியில் ஆழ்ந்த ஆழ்வார்கள் பாடிய பாடல்கள் நிகர ஏது? சிற்றிலக்கியங்கள பலவும திருமலை நாதனை வாழ்ததுகின்றன; வணங்குகின்றன. வேணடுகின்றன. தெலுங்கு இலகக்கியங்களும் இறைவனைப போறறிப் பரவுகின்றன.

## கபில தீர்த்தம்

சங்க காலம் தொட்டு இனறு வரைப் பலரும் பாராட்டும் திருமலை அடிவாரத்தில் அமைந்துள்ளது கபிலதீர்த்தம். பாதாளத்தில் கபில முனிவரால் வழிபடப்பட்டது ஒரு சிவலிங்கம். காமதேனுவின் பாலால் அபிஷேகம் செய்யப்பட்டது. இதத கைய சிறப்புமிக்க சிவலிங்கம பாதாளலோகத்திலிருநது வெளி வந்த இடமே 'கபிலதீர்த்தம்' என்று பெயர் பெறறது. இக்குளம் சற்றுச் சிறியது. இருப்பினும் மழைககாலங்களில சுற்றியுள்ள மலைச்சரிவுகளிலிருந்து நீர்வந்து கொட்டுவது காணற்கரிய காட்சியாக விளங்கு கின்றது.

## அடிப்புளி - அலிப்பிரி

கபில தீர்த்தத்திற்குச் சற்று மேற்கே அமைந்துள்ளது 'அலிப்பிரி'. தொன்மைக்காலத்தில் இவ்விடம் 'அடிப்புளி' என்று அழைக்கப்பட்டது. இராமானுஜர் திருமலை நம்பியிடம் இராமாயணம் கேட்டது ஒரு புளிய மரத்தடியில். அவ்விடம் 'அடிப்புளி' என்று வழங்கப்பட்டது. காலப்போக்கில் 'அலிப்பிரி' என்று மருவியது அடுத்து மலைக்குச் செல்லும் படிகள் மலைஏறும் அடியவர்களுக்கு வசதியாக மணடபங்களை உடையதாய் அமைந்துள்ளது. இடையிடையே களைப்பாற சிற்றுண்டிச்சாலைகளும் உண்டு. தொன்மைக் காலத்தில் அன்னசத்திரங்கள் இருநதன.

## கலிகோபுரம்-காளிகோபுரம்

'கலிகோபுரம்' என்பதே காளிகோபுரம் எனறு அழைக்கப்படுகினறது. இக்கலிகோபுரம் வரை படிகள் செங்குததாக அமைநதுள்ளன. இச்செங்குத்தான படிகளை ஏறும் பக்தர்கள் ஏழுமலையான் நாமங்களைச் சொல்லிக் கொண்டே மலையேறுவர். மலைச்சாரலில் உள்ள மூலிகைகளின் காற்றும், மலர்களின் மணமும் கலந்த தென்றல் தழுவ படி ஏறும போது திருமலையான் நாமங்களை அல்லும் பகலும் அலிபிரி தொடங்கி திருமலை வரை ஒலிபெருக்கிகள் மிக உன்னதமான ஒலியுடன் துதி பாடிக்கொண்டிருக்கும்.

## ஔவையார் பள்ளம்

'கலிகோபுரம்' தாண்டிய உடனே படிகள் மாயமாய் மறைநதுவிடும். அதன்பின் மான்களின் பண்ணையைப் பாரத்துக்கொண்டே தரைவழியாகவும், சிறிது தூரம் படிகளுமாகக் கடந்து சென்றுல் பேருந்து வழியோடு மலையேறும் வழி கலந்து விடும். 'அணை நீரைச்' சுவைத்துக்கொண்டே செல்லும் பொழுது சிகரங்களின் இடையே அமைந்த பெரும்பள்ளத்தைக் காணலாம். இதுவே 'ஔவையார் பள்ளம்' என்பது.

## முழங்கால் முறிச்சான்படி

தரைவழி நடைப்பயணம் 'ஔவையார் பள்ளத்தோடு' முடிவடைந்து விடுகின்றது. அடுத்து வருவது கலிகோபுரத்தை விடவும் உயரமான படிகளை உடைய முழங்கால் முறிச்சான்படி. இராமானுஜர் திருமலை வாசனை வணங்க

விரும்பினார். புனிதமான மலையில் தன் பாதங்கள் படக்கூடாது என்று முழங்கால்களால் அடிப்புளி முதல் திருமலை வரை ஏறிச்சென்ருர். இராமானுஜர் முழங்கால்களால் ஏறிச்சென்றதனாலாயேயே 'முழங்கால் முறிச்சான்படி' என்ற பெயர் ஏற்பட்டது.

## திருமலைக் காட்சிகள்

முழங்கால் முறிச்சான் படிகளைக் கடந்தபின் எளிய மலைப் பாதை வழியாக நடந்தால் 'மொட்டைகோபுரம்' எதிரப்படும். அதன்பின் நந்தவனங்கள் எதிர்படுகினறன. இறுதியாகப் பேருந்து நிலையம் வந்து விடுகின்றது. அதைத்தாண்டினால இலவச தங்கும் விடுதிகளும், கட்டண விடுதிகளும் அணிவகுகின்றன. அடுத்து, அணிவகுக்கும் கடைகள். அதன்பின் அடியவரைத் தன்னடிமையாக்கிக் கொள்ளும் மொடடையடிக்கும் இடம், நீராடுமிடம். தங்களை உள்ளத்தாலும் உடலாலும் தூய்மைப் படுத்திக் கொண்ட அடியவர்கள் வைகுண்ட வாயிலில் குடும்பம் குடும்பமாகக் கூட்டம் கூட்டமாக அணிவகுத்து கோவிந்த நாமம் சொலலிக்கொண்டு மெல்ல, மெல்ல நகர்ந்து சென்று பிர்காரம் கடந்து வெளிக்கோபுரம் அடைகின்றனர்.

வெளிக்கோபுர வாயிலில் இடையறுது வரும் நீரால் தங்கள் பாதங்களைத் தூய்மை செய்து கொண்ட அன்பர்கள் 'துஜாவர்ணக் கம்பம்' கடந்து உள்வாயிலை அடைந்து தங்க விமானம் கண்டு சேவிக்கின்றனர். பின் ஏழுமலையானின் திவ்விய சொரூபம் தென்படுகிறது. "அஜானுபாகு வாய் சுமார் ஒன்பதடிக்குமேல் உயரம், தாமரைப் பீடத்தின் மேல் பாதங்கள். நவமணிகள் பதித்த அணிகலன்கள், மகர குண்டலங்கள் மகர கண்டிகை, 108 லட்சுமி பொறித்த மாலை, தங்கப்பூணூல், தசாவதாரம் பொறிககப்பட்ட இடுப்புப் பட்டை, அதில் பட்டாக்கத்தி. பீதாம்பரம் உடுத்த திருமேனியை மலர்கள் அலங்கரிக்க மார்பில் அலர்மேல் மங்கையைத் தாங்கி, நெற்றியில் திருமண் தாங்கி சங்கு, சக்கரதாரியாய் ஒருகை அடியவர்களுக்கு அருளாகி வழங்க, மறுகை தன் திருப்பாதங்களைக் காட்டும் "நின்ற கோலம் அது". இக்கோலத்தைக் காண்பதே பிறவி பெற்ற பயன் என்று மனநிறைவெய்தினாலும் மீண்டும், மீண்டும் அவன் கோலம் காண விரும்பும் மனம்.

இந்நிலையில் காத்திருக்கும் பக்தர்களுக்காக நாம் கர்ப்பக் கிரகத்தினுள்ளிருந்து வெளியேற்றப்படுகிறேம். அங்குக் கிடைக்கும் குளிர்ந்த துளசி தீர்ததத்தைச சுவைத்தவாறு பிரகாரங்களைப் பார்வையிட்டவாறு திருமலையப்பன் தரும் பிரசாதங்களை உண்டு மகிழ்கிறேம். வெளிவாயிலுக்கு வரும் பொழுது வரம் பெற்ற பலத்துடன் இருக்கிறேம். அங்கு உலகப் பிரசித்திபெற்ற லட்டு வடையும் நம் கைகளை அலங்கரிக்கின்றது. கோவிலின் வடக்குப் பகுதியில் தேரடியில் தேர் காட்சியளிக்கிறது. அதன் எதிரே நீராழி மண்டபத்துடன் குளக்கரை. குளத்தின் மேற்கு மூலையில் வராகமூர்த்தி.

## பாபவிநாசம்

வராகமூர்த்தி கோவிலில் நாம் நிற்கும் பொழுது

## மூல மந்திரங்கள்

| | | |
|---|---|---|
| 1) விஷ்ணு | - | ஓம் நமோ நாராயணுய: |
| 2) சிவன் | - | ஓம் நம: சிவாய: |
| 3) தேவி | - | ஓம் உமா தேவியே நம: |
| 4) கணபதி | - | ஓம் கணபதியே நம: |
| 5) சுப்ரமணியர் | - | ஓம் சரவண பவாய நம: |
| 6) சாஸ்தா | - | ஓம் சாஸ்த்ர மூர்த்தியே நம: |

திரு. சி. வெங்கடேசன் - ஒசூர்.

நமது மனக்குரங்கை பக்தி என்ற கயிற்றல் திடமாகக் கட்டி உன் ஆதீனத்தில் வைத்துக்கொள்ளப்பா என்று பரமாத்வாவிடம் நாம் பிரார்த்தனை செய்துக்கொள்ள வேண்டும்.

மே ஹ்ருதய கபிம் அத்யந்த சபலம்
த்ருடம் பக்த்யா பத்த்வா
சிவ பவத் அதீனம் குரு விபோ!!

--காஞ்சி சுவாமிகள் அருள்உரை - 21
விகடன் வெளியீடு புத்தகத்திலிருந்து
திரு. சி. வெங்கடேசன் - ஒசூர்.

அடுத்த மலைசசிகரத்தில் மற ஒரு படித்தொடர் தென்படும். இதன்வழியாகச் சென்றால் திருமலையிலிருந்து மூன்று கி.மீ. தூரத்தில் உள்ள ஆகாச கங்கை என்ற நீர்வீழ்ச்சி உள்ளது. அதைக் கடநதால் ஏழாவது கி.மீ.ல் பாபவிநாசம் தென்படும. இந்நீர்வீழ்ச்சியில் நீராடியபின் பக்தர்கள் திருமலைககுத் திரும புவர்.

ஏழுமலையானை, திருமலை வாசனை தரிசித்த மககள ஊர் திரும்பு முன் லேபாட்சி எம் போரியத்தில் தரமான அழ கான கைவினைப் பொருட்க ளையும், வேங்கடாசலபதி உரு வம் பதித்த வெள்ளி மோதிரங களையும் வாஙகலாம். இவை யாவும் திருமலையில ஆண் டாண்டு காலங்களாயக் காணககிடைக்கும் காட்சிகளும் பொருள்களுமாகும.

## திருப்பதியில் உள்ள திருத்தலங்கள்

திருமலையைப் போன்று திருப்பதியில் உள்ள திருத் தலங்கள் இலலை என்றா லும் திருப்பதியில் "ஸ்ரீகோவிந் தராஜ சுவாமி"யின் கோவில் மிகப்பெரிய திருக்குளத்துடனும் விளங்குகின்றது. கோவிந்த ராஜ சுவாமிகள் பள்ளிகொண்ட நிலையில் உள்ளார்.

## திருச்சானூர்

திருப்பதியிலிருந்து ஐந்து கி.மீ. தூரத்தில் உள்ளது திருச்சானூர். திருச்சானூரில் ஆகாசராஜன் மகள 'பத்மாவதி' கோயில் கொண்டுள்ளார். கறி வேப்பிலையை இல்லத்திற் குரிய சீராகக்கொண்டு வராத காரணத்தால், பொழுது புல ருவதற்கு முன் கொண்டு வரவேண்டும என்ற திருமா லின கட்டளையை பத்மாவதி யால நிறைவேற்றமுடியாத தால வைகுண்டத்தில் வாழ்ந்த லட்சுமி திருச்சானூரில் கோயில் கொண்டுள்ளார் என்று கூறு வர். அலர்மேல மங்கை கோயில கொண்டுள்ள அலர் மேல மங்காபுரம (திருச்சா னூர்) சென்றாலதான திருமலைக குச சென்ற வேண்டுதல் பூர்த தியாகும் எனபர். அதுமட்டு மலலாமல மங்காபுரத்திலும், நாராயணவனத்திலும் உள்ள திருககலயாண வேங்கடேஸ்வர சுவாமி கோயில்களும், நாக லாபுரததிலுள்ள திருவேதநாரா யணசுவாமி கோயிலும் மிகவும் பழமையும சிறப்பும் உடையன.

## திருக்காளத்தி

சைவ சமயததவர்களுக்கு உரிய பஞ்சபூத தலங்களில் ஒன்றான திருககாளததியும் திருப்பதிக்கு அருகில் உள்ளது. 'வாயுத்தலம்' என்று காளததி கொள்ளப்படு கின்றது. அதனருகில் அழகிய பொன்முகலியாறும் கோவிலின் எதிரில கண்ணப்பா நில என்று தடுத்த 'குடுமியான் மலையும்' இயற்கை எழில் கொஞ்சி நிற் கின்றன. அடியவர்களின் துன பம் தீயிடையிட்ட பஞ்செனத தீயும திருத்தலங்களாகக் திரும லையும், திருப்பதியும் விளங்கிப் பூலோக சொர்க்கங்களாகக் கலி யுகததில் காட்சியளிக்கின்றன.



## ஸ்தலங்களும் சிறப்புகளும்

| | |
|---|---|
| காஞ்சிபுரம் | - சிவபெருமானைப் பூஜை செய்வது மூலம் அடைய வழிகாட்டிய ஸ்தலம் |
| மாங்காடு | - தவம் மூலம் இறைவனை அடைய வழிகாட்டிய ஸ்தலம் |
| திருவாஞ்சியம் | - காசிக்குச் சமமான ஸ்தலம் |
| சிதம்பரம் | - மூலவர் நடராஜரே வீதிவலம் வருவது |
| தஞ்சாவூர் | - மிகப்பெரிய அளவில் கர்ப்பக்கிருகத்தின் மேல் உள்ள கோபுரம் |
| இராமேசுவரம் | - சிவன்கோயிலில் தீர்த்தம் கொடுப்பது |
| திருநாகேஸ்வரம் | - ஸ்ரீநாகநாதருக்கு பால் அபிஷேகம் செய்யும்போது, பால் நீல நிறமாவது. |
| திருப்புளவாயில் | - நந்தியும், மூலலிங்கமும் ஆவுடையாரும் மிகப்பெரியது. |
| திருவானைக்கா | - உச்சிகால பூஜை அர்ச்சகர் பெண் வேடமிட்டு (அம்பாள் சென்று) சிவனுக்கு பூஜை செய்வது |

தகவல்: திருமதி. கமலவேணி தனபதி

# வைணவ வழக்குச்சொற்களும் பொருள்களும்

டாக்டர் மா. வரதராஜன் - திருப்பதி.

## தூ

தூக்குண்டு - தூக்கப்பட்டு

தூங்கத்தூங்க - அசைய அசைய

தூங்கார் பிறவி - அசைவு மிக்க பிறவி; தமோகுணம் நிறைந்த பிறவி

தூங்கும்படி - தொஙகும்படி; வீணுகக் கிடக்கும்படி;

தூங்குகின்றேன் - இழந்து வருந்துகிறேன்

தூங்கு - தூக்கமாய், தமோகுணத்தைச் சொல்லுகிறது

தூங்கு தண்பலா - இற்று விழுகிறதோ என்னும்படி பழுத்துவிழுகிற தண்-அழகிய பலாப்பழம்

தூங்கு பொன்மணி - பொற்கயிற்ருல் தொங்குகிற மணி. கயிறு-பொன்னாண்; பொன்னான மணி என்ருல் ஒலிக்காது. தூங்கு பொனமணி ஒலிக்கும்

தூங்கு மெத்தை - சுகமாகத் தூங்குவதற்கு அநுகூல மான மெத்தை என்றல்ல; ஊஞ்சல் போலே ஆடுகிற மெத்தை

தூங்குறி - தொங்குகிற உறி

தூசனம் - தூஷணம்; பழி

தூசாகும் - தூசு-பஞ்சு; பஞ்சு போலாகும்

தூசித்தலை - தூசி - யுத்தம்; முதல் யுத்தம்; முன்னணிப்படை

தூசியேறுகிறேன் - யுத்தத்தில் இறங்குகிறேன்

தூட்டி - உடை

தூண்டி - தானே செல்லுகை; நிளரி;

தூண் - எல்லாவற்றையும் தாங்கி தன் கீழே ஒதுங்குவார்க்கு நிழல் கொடுத்து இருப்பது அன்ருே தூண். அது போல எல்லார்க்கும் தாரகனாய் தன்னை அடைந்தாரக்கு நிழல் கொடுக்கையாலே எம்பெருமானும் தூணுகச் சொல்லப்படுகிருன்.

தூணுட்டி - தூணுக நாட்டி

தூதி - அன்னத்தின் சிறகு; தூவி

தூதியங்கி - தூது வேலையில் இறங்கி

தூது செய்கண்கள் - கருத்தை அறிவிக்கவல்ல கண்கள்

தூதர் வாயிலிட்டு-நீட்டுகை - தூதரிடம் சொல்லி அனுப்புகை

தூதுசெய் நம்பி - தூது சென்று அதனால் பரிபூர்ணனாவன்

தூதுவந்த குரங்கு - அனுமான்

தூதை - சோருக்கும் பானை; திப்பிச்சோறு சமைக்கும் பானை

தூப்பால் - தூய்மையான ஸ்வபாவம்

தூபங்கமழ்தல் - பரிமளம் வெள்ளமிடல்

தூம்பு - வேய்; மரக்கால்; துளை; முழை

தூமணி வண்ணன் - ஒரு ஆபரணமும் வேண்டாதபடி பழுப்பற்ற நீலமணி போல இருக்கிற வடிவை உடைய பெருமாள்

தூமது - தெளிந்த மது; தூயமது

தூமலராள் - பெரிய பிராட்டியார்

தூமறையோர் - தூய்மையுடையவரான பிராம்மணர்கள்

தூமாண்சேர் பொன்னடி - குற்றங்கட்கு எதிர்த்தட்டாய், அழகான திருவடி; மாண்சேர் பொன்னடி அழகாய் இருக்கும். தூய்மையானது குற்றமற்று இருக்கை

தூமுதல் பத்தர் - தூய்மையுடைய முதல் பக்தர்

தூமுறுவல் - வெண்முறுவல்

தூமென்மொழிமடவார் - பரிவும் பேச்சின் இனிமையும் தமக்கே உரிய பெண்கள்

தூய்தாக வந்து - நன்ருக வந்து

தூய்மறையோர் - தூய்தான மறையையே தங்களுக்கு நிருபகமாக-விசேஷணமாக உடையவர்கள்; மறையான வேதத்துக்குத் தூய்மையாவது ஒரு மனிதனால் இயற்றப்படாததாய் எப்போதும் இருப்பதாய் எவ்வித குற்றமும் இல்லாததாய் இருப்பதால் எல்லா பிரமாணங்களுக்கும் சிறந்ததாய் எம்பெருமானின் ஸ்வரூபம், குணம், வடிவு, செல்வங்களை உள்

ளபடி தெரிவிப்பதாகும்.

தூய்மாற்றம் - நல்ல வார்த்தை
தூய்மை யோகம் - சுத்தியோகம்
தூயகருங்குழல் - அழகியதாய்க் கறுத்திருந் துளள குழல்
தூயகுழவி - குற்றமற்ற குழவி-குழந்தை
தூயதமிழ் - சம்ஸ்க்ருத சொல்போலே இருண்டு பொருள தெரியா தபடி இல்லாமல பெண் ணுக்கும் பேதைகளும் அறி யலாம்படி தன் பொருளை வெளிப்படுத்தும தூய்மை யுடைய திராவிடமொழி.
தூயன் - எளியன
தூர்த்தர் - காமுகர்; எம்பெருமானை விட்டு கிடைக்க விஷயங் களில் மிகவும் ஆசை உடையவர்கள்
தூர்த்தல் - சுத்தம் செய்தல்
தூர்தை எடுக்கை - கிணற்றில் மண் தூரந்து கிடப்பதை எடுக்கை
தூரம் - குழமணி தூரம் என்று ஒரு கூத்து அதாவது தோற்ற வர்கள் தோல்விக்கு ஈடாக ஆடுவது
தூரல் - துன்பம்; நிறைகை
தூராத மனக்காதல் - ஆராத அன்பு
தூரிகை - தூலிகை; படம் எழுதும் கருவி; எழுதும் குச்சிக்குப் பெயர்
தூரிது - தூரத்திலுள்ளது
தூரியக்கோல் - கண்ணுக்கு மை இடும் துரும்புக்குப் பெயர்
தூரியம் - வாத்தியம்
தூவலம்புரி - தூய்மையான சஙகு. சங் குக்குத் தூய்மையானது எம்பெருமான் நினைவ றிந்து கார்யம் செய்யும் தூய்மை
தூவாயபுள் - தூ ஆயபுள்-பெரிய திரு வடி
தூவி - சிறகு
தூவிட - தூவி இட
தூவியம்புள் - பெரிய திருவடி; கருடன்
தூவு - தூய்மை; பற்றுக்கோடு; பகை; வேம்பு
தூவுகை - தானம் பண்ணுகை
தூவேன்மின் - பழிக்காதீர்கள்; தூவிக்கெ டுக்காதீர்
தூளியம் - நல்லாடை; ஈயம்; எழுதும் கோல்
தூறு - ஸம்ஸாரம்; புகுந்த இட மும் புறப்பட்ட இடமும் தெரியாத ஸம்ஸாரம்; புதர்

# தெ

தெக்காநெறி - நரகத்துக்குப் போகும்வழி, தெக்கான் என்று தெற்குத் திக்குத் தலைவனான யம னைச்சொல்லி அவன் ஸம் பந்தியான வழி என்பதா கும்.
தெக்கு - வெறுப்பு; கழுகு
தெகுசொல் - அறிவீனம்
தெகுடாடுகை - அலமருகை; திருமாறுகை; தடுமாறுகை
தெகுட்டும்படி - தெவிட்டும்படி. தித் திப்பு தெகட்டுகிறது என் பதுபோல்
தெங்கள் - நிலை
தெடுத்தெல்லாம் - விரும்பினதெல்லாம்
தெங்கின்பழம் - தேங்காய், நாரிகேளபலம் என்பது போல
தெங்கின் தேறல் - தென்னங்கள்ளு
தெட்டபழம் - கனியப்பழுத்தபழம்; பக்கு வமான பழம்
தெட்டி - முற்றி; யானை; செட்டி; பெருமை
தெண்கயங்கள் - தெளிந்த குளங்கள்
தெண்ணிறைச் சுனைநீர் - தெளிந்து நிறைந்த சுனை நீர்; தெண்ணிறச்சுனை என்று தெளிந்து பிரகா சமான நிறத்தை உடைய சுனை
தெத்திக்கிடக்கை - நெருங்கிக்கிடக்கை
தெத்துகை - கிட்டுகை
தெப்பர் - விரோதி; கடன்கொடுத்து வாங்குகிறவர்
தெய்வக்குழாங்கள் - தேவதைகளின் கூட்டம்
தெய்யில் - சேறு
தெய்வத்துக்கரசு - நித்ய சூரிகளின் தலைவன்
தெய்வநங்கை - யசோதை
தெய்வநாயகன் - நித்ய சூரிகளுக்குத் தன்படி யெல்லாம் அநுபவிக்கலாம் படி கொடுத்துக்கொண்டி ருப்பவன்; ஸர்வதேச நாய கன்; ஸர்வேச்வரன்.
தெய்வம் - நறுநாற்றம்; எண்வகை மணங்களில் ஒன்று
தெய்வப்புள் - பெரியதிருவடி
தெய்வவடமலை - திருமலைக்குப்பெயர்; நித் யசூரிகளான வடக்குத்திரு மலை; திருவேங்கடம்
தெய்வவண்டு - தெய்வமாகிற வண்டு
தெய்வவாரி - தெய்வங்கள் படும் கடல்
தெரி - நினை; அறி; விசாரி; விச தம்
தெரிசி - குதிரை
தெரிக்கமாட்டேன் - நிச்சயிக்கமாட்டேன்

| | | |
|---|---|---|
| தெரித்துப்பிடித்த பகழி | - | தெரிந்து:அடுத்து, பகழி-அம்பு; வில்லின் நாணியைச் சுண்டிவிட்டுப் பிடித்தஅம்பு |
| தெரிதல் | - | கேட்டறிந்து |
| தெரிந்த மட்டு | - | தெரிந்த அளவும் |
| தெரிமா | - | சிங்கம் |
| தெரியச்சொன்ன | - | வெளிப்படையாக அறிந்து கொள்ளலாம்படி சொன்ன |
| தெரியல் | - | மாலை |
| தெரியிலம் | - | அறிகிறிலோம் |
| தெரியுகிர் | - | கூரான நகம் |
| தெரிவு | - | ஞானம் |
| தெரிவைமார் | - | பெண்கள் |
| தெருள் | - | ஞான விபாகமான பக்தி |
| தெருடியாகில் | - | அறிவுடையையாகில் |
| தெருவணிந்து | - | தெரு அழகு பெறும்படி |
| தெருளாதபிள்ளை | - | ஞானயோக்யதை இல்லாத பிள்ளை |
| தெருளாமொழி | - | குழந்தைப்பேச்சு |
| தெவ்வம் | - | சத்ருக்கள் |
| தெவ்வியல் | - | பூமாலை |
| தெவிட்டல் | - | ஓவுதல்; கான்றல்; நிறைத்தல் |
| தெவிட்டி | - | அதிருப்தியாலே வேண்டியிராமை |
| தெழிதல் | - | முழங்குதல் |
| தெழிக்குநீர் | - | ஒலிக்கிற கடல் |
| தெழித்தான் | - | கிழித்துப்போட்டான் |
| தெழித்தல் | - | ஆரவாரித்தல்; ஆட்டஹாஸம் செய்தல் |
| தெள்ளி | - | தெளிந்து |
| தெள்ளியகுறள் | - | தெளிந்த வாமனன் |
| தெள்ளியசிங்கமாகிய தேவு | - | தெளிந்திருந்துள்ள நரசிம்ம அவதாரம் |
| தெளளியர் | - | நித்ய சூரிகள்; தெளிந்த அறிவுடையார் |
| தெளிதாகிய சேண்-விசும்பு | - | நாள் செல்லச்செல்ல தெளிவை உண்டு பண்ணுவதாய் திரும்பி வருதல் இல்லாத பரமபதம் |
| தெள்குகை | - | தேங்குகை |
| தெளிப்பு | - | தூவுகை |
| தெள்ளுதல் | - | கொழித்தல்; தெளிவு |
| தெற்குத்திருமலை | - | திருமாலிருஞ்சோலை என்னும் திவ்யதேசம்; அழகர் மலை |
| தெற்குவீடு | - | திருக்குறுங்குடி என்னும் திவ்ய தேசம் |
| தெற்றியம்பலம் | - | திருநாங்கூர் திவ்ய தேசங்களில் ஒன்று |
| தெற்றிவர | - | தொகுத்துவர, அடுக்கிவர, |
| தெற்றளவு | - | தெளிவு; வெட்கக்கேடு |
| தெறிக்கை | - | சிதறுகை; தொடுக்கை |
| தெறுக்கால் | - | தேள் |
| தென்கரை | - | திருக்காட்கரை என்னும் திவ்யதேசம் |
| தென்குளந்தை | - | திருக்குளந்தை எனனும் திவ்யதேசம் |
| தென் | - | அழகு; தெற்கு; வலி |
| தென்தமிழன | - | தெற்கிலுள்ள தமிழ் நாட்டுக்கு அரசன் |
| தென்திருப்பேர் தென்திருப்பேரையில் தென்திருப்பேரை | - | ஆழ்வார் திருநகரிக்கு கிழக்கில் உள்ள திவ்ய தேசத்திற்கு மூன்று பெயர்கள். மகர நெடுங்குழைக் காதன் கோயில் |
| தென்புலம் | - | யமபுரம் |
| தென்புதுவை | - | ஸ்ரீவில்லிப்புத்தூர் |
| தென்றல் | - | தென்திசையிலிருந்து வீசும் காற்று |
| தென்ன | - | தென்னதென்னா என்னும் ஆளத்தி |
| தென்னவன் | - | தெற்குத்திக்குக்கு அதிபதியான யமன்; பாண்டியன் |
| தென்னன்தமிழ் | - | அகஸ்தியரின் தமிழ்; தென்னான தமிழ் |
| தென்னாலி | - | திருவாலி நாடு |
| தென்னானாய் | - | திருமாலிருஞ்சோலை மலையில் ஆனைபோல் நிற்கும் அழகர் |
| தென்னிலங்கை | - | கட்டளைப்பட்ட இலங்கை. கட்டளைப்பாடாவது ஒரு வரால் அழிக்கமுடியாதது. |
| தென்னிலங்கையாட்டி | - | சூர்ப்பணகை |
| தென்னுரை | - | தமிழ் நூல்கள் |

☆

## எட்டு சுயம் வியக்த விஷ்ணு கோவில்கள்

(தானாகவே தோன்றிய மூலவர்களை உடைய கோவில்கள்)

1) ஸ்ரீரங்கம்
2) திருமுஷ்ணம்
3) திருவேங்கடம் (திருப்பதி)
4) சாளக்கிராமம்
5) நைமிசாரண்யம்
6) வானமாமலை
7) புஷ்கரம்
8) பத்ரிநாத்

(மு. திரவியம் அவர்களின் 'இந்து சமயக் களஞ்சியம்' புத்தகத்திலிருந்து)
திரு. சி. வெங்கடேசன் - ஒசூர்.

# திருவேங்கடவுலாவில் திருமலையின் சிறப்பு

திரு. ஆர். பிரபாகரன் - திருப்பதி.

சிற்றிலக்கியங்களுள் சிறப்பாகக் கருதப்படுவது உலா இலக்கியம். திருவேங்கடவுலா என்னும் இலக்கியத்தில் பாட்டுடைத் தலைவனாக திருமால் தேரில் அமர்ந்து தெருவில் உலா வரும் பொழுது ஏழு வகை பருவமகளிர் அவன்பால் ஈடுபட்டுத் தன் உள்ளத்தெழுந்த காதற் கருத்துக்களை எடுத்து கூறுவதாகவும், திருமால், திருமலையின் சிறப்பைப் பல கற்பனை நயங்கள் அமையுமாறும் பாடப்பட்டுள்ளன.

திருமலையிலுள்ள ஏழு பெயர்ளாகிய சிம்மாசலம், நாராயணாசலம், சேஷாசலம், அஞ்சனாசலம், கருடாசலம், வேங்கடாசலம், இருஷபாசலம் என்றும், மலைகளில் பொன்முகரி என்னும் சுவர்ணமுகி ஆறு, திருமாலின் ஐந்து படைக்கலன்களின் பெயர் வாய்ந்த பாஞ்சாயுத தீர்த்தம், ஆலாயுத தீர்த்தம், நரசிங்க தீர்த்தம், காசி தீர்த்தம், அக்கினி தீர்த்தம் ஆகியன திருமலைக்கு மேலும் எழில் சேர்க்கின்றன என்பதைக் கீழ்வரும் வரிகள் காட்டும்.

"பக்கமதிற் பொன்முகரி பாய்வேங் கடநண்ணிச்
சக்கரதீர்த் தாந்தனிலாடி மிக்கநெடு" (21)

திருவேங்கடவனின் திருமுகப்பு வாயில் செண்பகவாயில் போன்று சிறந்து விளங்குகின்றது. இதை தற்பொழுது சம்பங்கிப் பிரதக்ஷிணம் என்று வழங்குகின்றனர். திருமால் சிவந்த கோவைப்பழம் போன்ற சிவந்த திருவாய் உடையவன். திருமகள் அகலாது உறையும் திருமார்பினான் என்பதை,

"செங்கனி வாயன்திருவேங்கட முடையான்
மங்கை மலர்மேன் மங்கை மார்பினான்" (39)

திருமால் திருமலையில் ஆழ்வாரக்கு வேடுவனாக தோன்றி அருளிய செய்தியை,

"வெறுங்கைவே டன்பெரிய வேங்கடத்து வாணன்" (42)

எனக்குறித்துள்ளார். திருமலையிலுள்ள கோயிலின் பிராகாரசுவர்கள் விண்ணைமுட்டுகின்றன. திருத்தேர் செல்லக்கூடிய தெய்வத்தெரு இருக்கின்றது. சந்தனம், குரு



கதலி மரங்கள், தென்னந் தோப்பு, கரும்பு, வாழை, மாதுளை, மா, பலா ஆகியன காய்த்துக்குலுங்க பூஞ்சோலை யில மலர்கள் பூத்துக்குலுங்க மன்மதன் காவலகாக அழகாக திருமலை விளங்குகின்றன.

புரட்டாதி திருநாள் எனப்ப டுவது திருமலையில புரட்டாசி மாதம நிகழ்ததும் பிரமமோத் ஸவம் ஆகும். இத் திரு விழாவினை முதலில பிரம்ம தேவன் தொடங்கியதாக தல புராணத்தால் அறிய முடிகின் றது. இச்செய்தியை திருவேங் கடவுலாவில்,

"செய்த புராட்டாதித் திருநாளிலே யொருநா

ளெய்திவ்வை குந்தத்தினு மிருந்து-கைசெய்து" (110)

திருவேங்கடவனின் திருத்தே ரில் வயிரம், வயிடூரியம், மர கதம், பவளம், பதுமராகம், மாணிக்கம், கோமேதகம், பொன் னாடை முதலியவற்றால் அழு குற அமைத்துள்ளனர்.

"வீசவுலாவி விளங்குமணி வைகுந்த

வாச லெழிற் கோபுரமுன்

வந்தெய்தித்-தேசுபொழி (159)

வச்சிரத்தட்டு வயிடூரி யப்பலகை

பச்சையிருசு பவழக்கா-லச்சுப்" (160)

இத்தகுச் சிறப்பு வாய்ந்த திருத்தேரில் ஸ்ரீநிவாச பெரு மான் ஒரு தேரிலும், பூப்பி ராட்டியார, பின்னை பிராட்டி யார் இருவரும் மற்றொரு தேரி லும் சென்ற பழஞ்செய்தி இந் நூலில் அறிய முடிகின் றது. திருமாலின் திருத்தேர் புறப்படும்பொழுது முரசு அதி ரவும், பேரிகைகள் முழுங்க வும், வாத்தியங்கள் ஒலிச்செய் யவும், அன்னப்பறவைகள் பறப் பது போன்று சந்திரவட் டக குடைகள நெருங்கி அசை கின்றன. வெண்முத்துக்குடை யுடன் வெண்சாமரை வீச, கட்டியம் கூறுவோர, வேததிரத தர், காளாஞ்சியர அருகில் நிறக, விசவக்சேனர உடன செலல திருத்தேர் திருவுலா நிகழ்ச்சி கூறப்படுகின்றது.

திருமால் திருததேரில் உலா வரும்பொழுது, பெண்கள் முத்துமாலை, துளசிமாலை அணிந்து பீதாம்பர ஆடை உடுத்தி கயல்மீன போனற கண களுடன் கலககமடைநது உள் ளனர். திருமாலே முல்லை, அசோகு, நீலம், மா, தாமரை ஆகிய மலர அம்புகளால இந்த மன்மதனை வருத்தும்படி செய் கிறார்.

"வானம் படைத்து வசிகரித்து மன்மதனை

யாளெம் பெருமா னடியாரு-

நாளுமவர்" (196)

திருவேங்கடவனைக்கண்ட பெண்கள் கண் இமைக் காது வைத்த கண் மயங்கி மெய்மறநது நிற்கின்றனர். கண்ணன் திருமலையிலுள்ள கோனேரி என்னும் சுவாமி புஷ் கரிணியில் தாமரைமலர்கள் பூத்துக்குலுங்க, அல்லி அரும் புகள் ஆடிக்கொண்டிருக்க நறு மணமுள்ள தேவதீர்த்தத்தில் குளித்தார்.

"கண்ணன்கோ னேரிதனிற் கஞ்சத்தருணமுகை

விண்ணவர் தீர்த்த விரைத்திவலை-

யெண்ணின்முளை" (249)

திருமலையில் வீற்றிருக்கும் திருவேங்கடநாதனை காணச் செல்லும் பக்தர்களுக்கு மூன்று வழிகள் உள்ளன.

"குழக்கொண்டுலக மெலாங் கோவிந்தா வென்று

முழக்கி வரும்வழிகள் மூன்றுங்-

தழைக்கு" (310)

அவை மட்ல அநந்தராசா அமைத்த படிக்கட்டு ஏற்றம், அச் சுத தேவராயர் அமைத்த சந்தி ரகிரிபபடி வழி, ஆனையேற்றம் எனனும் மூன்று வழிகளிலும் பகதர்கள் கோவிந்தநாம முழக் கம் செய்து ஏறுவது வழக்கம்.

மனிதர்களின் உடலில் உண் டாகும் கொடிய நோய்க ளான வெண்குட்டம், கருமேகம் ஆகிய நோய்களை உடையவர் கள், திருமலையில் இருக்கும் புண்ணிய பூஞ்சுனையில் தீர்த் தமாடி இறைவனை வேண்டி னால் குணமாக்குவான் என் பதை,

"வெள்ளை கருமை விலக்குவான் பூஞ்சுனையில்

வள்ளையிருந்த மணிக்குழையான்-

பிள்ளையிலாக்" (380)

"தன்னடிமை யாக்கித் தலைமயிரை

கண்டிப்பான்" (390)

இவ்வரிகளால் திருமலைக்குச் செல்லும் பக்கதர்கள் தலைமுடி யைக் காணிக்கையாகச் செலுத் துவதின் மூலம் திருமா லின் அருள் பெற்றுச் செல் லும் வழக்கும் பல ஆண்டுக ளாக நிலவுவதை நாம் காண முடிகின்றது. இந்நூலில் தலத்துக்குரிய நடைமுறை வர லாறு, திருவிழா, திருக்கோ யிலின் அமைப்பு, திருப்பணி, சேவிப்போன் முதலிய செய்தி கள் குறிப்பிடப்பட்டுள்ளன. திருமலையிலுள்ள கோயிலில் இரண்டாம் பிராகாரத்தில் வடக் குச் சுவரில் இந்நூல் குறித்த சான்று கல்வெட்டு ஒன்றில் காணப்படுகின்றது.

இவ்வாறு திருவேங்கடவுலா வில் திருமலையின் சிறப்பு என் னும் இக்கட்டுரையில் திருமால் உலா வரும் நிகழ்ச்சியும திரும லையின் சிறப்பும் அருட்சிறப் பும் தெள்ளிதின் புலபபடுவதை அறியலாம்.



Published on behalf of T. T. Devasthanams by N. S. Ramamurthy, M.A., Editor and

Printed at T.T.D. Press by M. Lakshman Rao, Manager, T.T.D. Press, Tirupati - 517 507

